


"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.


| தொகுதி | தாரண ௵ ஐப்பசி ௴ ௧ ௳ | பகுதி |
|---|---|---|
| 30 | 1944 ௵ அக்டோபர் ௴ 17 ௳ | 4 |


## உள்ளுறை.




## கடவுள் வணக்கம்.

நீரகத்தாய்! நெடுவரையின் உச்சிமேலாய்!
நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்த கச்சி
ஊரகத்தாய்! ஒண்துறைநீர் வெஃகா வுள்ளாய்!
உள்ளுவார் உள்ளத்தாய்! உலகமேத்தும்
காரகத்தாய்! கார்வானத் துள்ளாய்! கள்வா!
காமருபூங் காவிரியின் தென்பால் மன்னு(ம்)
பேரகத்தாய்! பேராது என்நெஞ்சி னுள்ளாய்!
பெருமான்! உன்திரு வடியே பேணினேனே. (1)

பொன்னானாய்! பொழில்ஏழும் காவல் பூண்ட
புகழானாய்! இகழ்வாய தொண்டனேன் நான்
'என்னானாய்! என்னானாய்' என்ன லல்லால்
என்னறிவன் ஏழையேன்? உலக மேத்தும்
தென்னானாய்! வடவானாய்! குடபா லானாய்!
குணபால மதயானாய்! இமையோர்க்கு என்றும்
முன்னானாய்! பின்னானார் வணங்கும் சோதி!
திருமூழிக் களத்தானாய்! முதலா னாயே! (2)

வங்கத்தால் மாமணிவந்து உந்து முந்நீர்
மல்லையாய்! மதிற்கச்சி யூராய்! பேராய்!
கொங்கத்தார் வளங்கொன்றை அலங்கல் மார்வன்
குலவரையன் மடப்பாவை இடப்பால் கொண்டான்
பங்கத்தாய்! பாற்கடலாய்! பாரின் மேலாய்!
பனிவரையின் உச்சியாய்! பவள வண்ணா!
எங்குற்றாய்? எம்பெருமான்! உன்னை நாடி
ஏழையேன் இங்ஙனமே உழிதரு கேனே. (3)

மின்னுருவாய் முன்னுருவில் வேதம் நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய்
பின்னுருவாய் முன்னுருவில் பிணிமூப் பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாது எண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூதம் ஐந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவில் திகழுஞ் சோதி
தன்னுருவாய் என்னுருவில் நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடி என் தலைமேலவே. (4)

# வறுமையுடன் போராடுங்கள்!

"யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்
உறங்குவதுமாக முடியும்"

என்று அருளினார் தாயுமானார். மக்கள் வாழ்க்கை நிலையைக் கூர்ந்து ஆராய்ந்தால், உண்ண உணவு, உடுக்க உடை, வசிக்க இருப்பிடம் ஆகிய மூன்றும் மிக முக்கியமாகும்; இவற்றில் ஒன்று இன்றியும் உலகில் நல்வாழ்க்கை நடத்த முடியாது என்ற பேருண்மையை யாவரும் அறிவர். மக்களின் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவான இம்மூன்று வசதிகளுக்குப் பின்னர்தான், கலை, நாகரிகம், மொழிப்பற்று, சமூகப் பற்று, நாட்டுப்பற்று, மற்றும் உல்லாச வாழ்க்கைகள் எல்லாம் நடைபெறும். ஜனசமூதாயம் இம் மூன்று அடிப்படை யம்சங்களின் மீதுதான் நிலவியிருக்கிறது. ஆகவே, மக்களுக்கு வயிறார உண்ண உணவோ, நன்றாக உடுத்தக்கூடிய உடையோ, சுகாதாரத்துடன் வசிக்க இருப்பிடமோ தராத தேசமோ அரசாங்கமோ இருந்து பயனில்லை.

குடியரசாயினும் முடியரசாயினும் மக்களின் ஜீவியத்துக்கு இன்றியமையாத தேவைகளான உணவு, உடை, உறையுள் ஆகிய மூன்றையும் முக்கியமாகக் கவனித்துப் பூர்த்தி செய்தால்தான் அது நல்லரசாங்கம் எனப்படும். அத்தகையதொரு சிறந்த அரசாங்கம் இன்று மக்களுக்கு வேண்டும். ஒரு சில மக்கள் அஜீரணம் ஏற்படும் படியாகத் தின்று கொழுத்தும், பட்டு பீதாம்பரங்கள் உடுத்தியும், மாட மாளிகைகளில் வசித்தும் வாழப், பெரும்பாலானமக்கள் அரைவயிற்றுக்கும் கஞ்சியின்றி, உடம்பை மறைக்கக் கிழிந்த கந்தையுமில்லாது, இருக்க ஓரடி நிலங்கூட இல்லாமல் கஷ்டப்படும் நிலையில் ஒரு அரசாங்கம் ஆட்சி செலுத்துமானால் அது கலை நாகரிகங்களில் தலைசிறந்து விளங்கினாலும் குபேரபட்டினம் என்று சொல்லத்தக்க வகையில் செல்வச் செழிப்புடன் இருந்தாலும் அதை யாரும் செங்கோல் செலுத்தும் நல்லரசாங்கம் என்று கூறிப் பாராட்ட மாட்டார்கள். படை பலத்திலோ, ஆயுத பலத்திலோ மிகுந்த அரசாங்கமாயினும், பிரஜைகளாகிய குடிமக்கள் நல்ல நிலைமையில் இல்லையென்றால், அதாவது, மக்கள் வலிமை வாய்ந்தவர்களா யில்லாவிட்டால், மக்கள் பலமில்லாவிட்டால் அது வல்லரசாகக் கருதப்பட மாட்டாது. எனவே, ஓர் அரசாங்கத்தின் கீழ் வாழும் மக்கள் அனைவரும் உண்ண உணவும், உடுக்க உடையும், வசிக்க உறையுளும்

குறைவற உடையவர்களா யிருப்பார்களாயின், அதுவே அமர லோக வாழ்வு என்று கொண்டாடப்பெறும்.

இவ்வித நிலையில் இன்று உலகில் நிலவும் அரசாங்கங்கள் இருக்கின்றனவா? பெரும்பாலும் இல்லை என்றே சொல்ல வேண்டும். ஏதோ ரஷ்யா தேசம் ஒன்றில்தான் கார்ல் மார்க்ஸ் வகுத்துக் கொடுத்துச் சென்ற சமதர்ம திட்டத்தை லெனின் அரசாங்க அமைப்பாக நிறுவிச் சென்றதன் பயனாக ஸ்டாலி னால் ரஷ்ய மக்கள் உணவுக்கும், உடைக்கும் உறையுளுக்கும் கவலையின்றிச் சமதர்ம சந்தோஷ வாழ்க்கை நடத்துகிறார்கள் என்று கேள்விப்படுகிறோம். ஜனநாயக அரசாங்கங்கள், குடி யரசுகள், பாஸிஸ்ட் ராஜ்யங்கள் என்று சொல்லப்படுகிற பிற அரசாங்கங்களி லெல்லாம் ஒரு சில மக்கள் முதலாளிகள் என வும் பிரபுக்கள் எனவும் கூறிக்கொண்டு செல்வத்தில் புரண் டும், பெரும்பாலான மக்கள் வறுமையில் வாடியும் வரும் நிலையைக்—காட்சியைத்தான் காண்கிறோம். அதுவும், இந்த மகாயுத்தம் வந்த பின்னர் மக்கள் வாழ்க்கை நிலை இன்னும் மோசமாய் விட்டது. பஞ்சமும் பசியும் எங்கும் பரவிவிட் டன. தரித்திர தேவதை கோரமாகத் தாண்டவ மாடத் தொடங்கி விட்டது. வாழையடி வாழையாக ஏழ்மை நிலை யையே துணையாகக் கொண்டுள்ள மக்கள் மட்டு மல்லாமல், கௌரவமாக வாழ்க்கை நடத்திவந்த மக்களெல்லாம் கூட வறுமையில் ஆழ்ந்து துயருறு கின்றனர். இவ்விதக் கேவல நிலை நீடிக்குமானால், மனிதப் பூண்டே அற்றுப் போய்விடுமோ என்று எண்ணும்படியாக இருக்கிறது. ஆகவே, இதற்கொரு பரிகாரம் உடனடியாகத் தேடவில்லையானால், மனித சமுதா யம் நிலைகுலைந்து போய்விடுமென்பது நிச்சயம்.

இந் நிலையில் பிரிட்டிஷ் அரசாங்கம் தன் ஆட்சியின் கீழுள்ள மக்களின் வாழ்க்கை நிலையை யுணர்ந்து பரிகாரந் தேட முன் வந்திருப்பது அறிந்து மகிழ்கிறோம். பிரிட்டனில் ஏழைகள், பணக்காரர்கள் அனைவருக்கும் ஜனன முதல் மரண பரியந்தம் சமூகப் பாதுகாப்பு அளிக்கும் திட்டமொன்று சமீ பத்தில் வெளியிடப்பட் டிருக்கிறது. அததிட்டத்தின் முக்கி யாம்சங்களாவன;—

1. எல்லா மக்களுக்கும் குடும்ப அலவன்ஸ்;—ஒவ்வொரு குழந்தைக்கும் வாரா வாரம் 5 ஷில்லிங். பெற்றோர்கள் வேலை யில்லாம லிருந்தால் மூத்தபிள்ளைக்கு இந்த 5 ஷில்லிங்.

2. வேலை யில்லாதவர்களுக்கு உதவி;—தம்பதிகளுக்கு வாரத்திற்கு 40 ஷில்லிங். தனிப்பட்ட ஒருவருக்கு 24 ஷில்லிங்.

3. தேக அசௌக்யமாக இருப்பவர்களுக்கு உதவி—வேலை யில்லாதவர்களுக்கு என்ன தரப்படுகிறதோ அதே அளவு தொகை.

வயோதிகர்களுக்குப் பென்ஷன்:—ஒரு ஆடவருக்கும் அவரது மனைவிக்கும் 35 ஷில்லிங். தனிப்பட்ட ஒரு ஆடவருக்கு 25 ஷில்லிங்.

விதவைகளுக்கு உதவி;—முதல் 13 வாரங்களுக்கு வாரத்துக்கு 36 ஷில்லிங். பிறகு வாரத்துக்கு 20 ஷில்லிங். ஒவ்வொரு குழந்தைக்கும் அதிகப்படி 5 ஷிலலிங்.

பிரசவ கால மான்யம்:—4 பவுனும் வாரத்துக்கு 36 ஷில்லிங்கும்.

மரண மான்யம்:—20 பவுன் வரையில் வயதுக் கேற்றபடி.

அநாதைகள் அலவன்ஸ்:—வாரத்துக்கு 12 ஷில்லிங்.

இத் திட்டத்தை அமுல் நடத்த சமூக இன்ஷ்யூரன்ஸ் இலாகா வொன்றைப் பிரிட்டிஷ் சர்க்கார் ஆரம்பிக்கும்.

இச் சமூகப் பாதுகாப்புத் திட்டம் கிரியாம்சையில் நடப்பதற்கு வருடந்தோறும் 65 கோடி பவுன் விகிதம் செலவாகும் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. எல்லா மக்களும் வாரா வாரம் இதற்கு 1 ஷில்லிங் 10 பென்ஸிலிருந்து 4 ஷில்லிங் 2 பென்ஸ் வரையில் சந்தா செலுத்த வேண்டுமாம். மக்கள் தத்தமக் கேற்ற சந்தாவைச் செலுத்துவதன் வாயிலாகப் பெருவாரியாகப் பிரதி பலனைப் பெறுவார்களாம். பிரிட்டிஷ் மக்கள் யுத்த காலத்தில் தியாக வாழ்க்கையைச் சமத்துவமாகக் கடைப் பிடித்து வருவதுபோலவே, சமாதான காலத்திலும் பொது நலத்தைக் கருதித் தொடர்ந்து மேற்படி கொள்கையைக் கடைப் பிடித்து வரவேண்டும் என்று இத் திட்டம் வற்புறுத்துகிறது. இத் திட்டம் 1945-ம் ஆண்டில் தொடங்கவேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இது கூடிய சீக்கிரம் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் சமர்ப்பிக்கப்படுமாம். இதன் பயனாக, முதன் முதலாக, சமூகப் பாதுகாப்பு மந்திரி ஒருவர் நியமிக்கப்படலாம் என எதிர் பார்க்கப்படுகிறது.

இவ்விதம் சமூகப் பாதுகாப்புத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவது வாயிலாக, பிரிட்டிஷ் அரசாங்கம் வறுமை மீது போர் தொடுத்து அதை ஒழிக்க முற்பட்டு விட்டது என்பது யாவரும் மன முவந்து வரவேற்றற் குரியதே. பிரிட்டிஷ் அரசாங்கம் நாட்டு மக்களைப் பீடித்து வாட்டி வரும்

வறுமையை ஒழிக்க முற்பட்டிருப்பது போல, தன் ஆதிக்கத்திலிருக்கும் இந்தியா போன்ற நாடுகளிலுள்ள மக்களின் வறுமை நிலையைப் போக்க முற்படுமா? தன்னுட்டு மக்களின் துன்பத்தையே யலலாது, தன் ஆதிக்கத்திலுள்ள நாட்டு மக்களின் துன்பத்தையும் துடைக்க முயல்வதுதான் நடுநிலையாக நீதி வழங்கும் நல் லரசாங்கத்தின் கடமை யாகும்.

* * * *

சமீபத்தில் சென்னை நகரசபைக்குக் கமிஷனராக வந்திருக்கும் ஸ்ரீ ஜே. பி. எல். ஷெனுய், வீடற்ற ஏழை மக்களுக்கும் பிச்சைக்காரர்களுக்கும் பெருநோய் கொண்டோருக்கும் உதவி புரியத் திட்டமொன்று வகுத்திருக்கிறுர். வீதியோரங்களிலும், சாக்கடை யருகிலும் வசிக்கும் வீடற்ற மக்களும், நகர சுகாதாரத்துக்குப் பெருங்கேடு விளைவிக்கும் அசுத்தமான சேரிகளும், தொத்து நோய்கள் பரவுவதற்கு ஏதுவான பிச்சைக்காரக் கும்பல்களும் நகரத்தின் சிறப்பைக் கெடுத்துவருவதால், பொதுஜன சுகாதாரத்தை அபிவிருத்தி செய்யும்வகையில் நடவடிக்கை யெடுத்துக் கொள்ளவேண்டும். இத்துடன், வேலை தேடி நகரத்துக்கு வந்து தங்க இடமில்லாமல் திண்டாடும் ஏழை மக்களுக்குக் குடியிருப்பு வசதி யளிப்பது, க்ஷய ரோக நோயைப் பரவாமல் தடுப்பது, குஷ்டரோகிகளைச் சமாளிப்பது முதலிய பிரச்சினைகளையும் உடனடியாகத் தீர்க்க வேண்டும். இவ்விதம், நகரத்தின் அழகைப் பாழ்படுத்திப் பொதுமக்களின் சுகாதாரத்துக்குக் கேடுவிளைவிக்கும் அசுத்தம், மோசமான குடியிருப்பு நிலைமை, தரித்திரம், தொத்து நோய் அபாயம் ஆகிய கோரக் காட்சிகளை அகற்ற, குறைந்தது 10 லட்சம் ரூபாய் தேவையாயிருக்கிறது. பொதுமக்களின் பொருள் உதவியினுலேயே இக்காரியங்களைச் சாதிக்கவேண்டியிருப்பதால், நகர மக்சள முக்கியமாகச் செல்வந்தர்கள் தங்களாலியன்ற பொருளுதவியைத் தாராளமாகப் புரிய வேண்டுமென்று, சென்னை நகரசபை கமிஷனர் விண்ணப்பித்துக்கொண்டிருக்கிறுர். வெகு காலத்துக்கு முன்பே செய்திருக்கவேண்டிய மேற்குறித்த நல்ல காரியங்களுக்குச் சென்னை நகர மக்கள்—முக்கியமாகச் செல்வந்தர்கள் தங்களாலான பொருளுதவியைக் கட்டாயம் செய்யவேண்டும். முக்கியமாக அரசாங்கம் செய்யவேண்டிய இக்காரியங்களை நகர சபை செய்ய முற்பட்டிருப்பதால், அரசாங்கமும் தன் கடமையை புணர்ந்து தக்க உதவி புரியவேண்டியது அவசியம். இவ்விதம், அரசாங்கமும் மக்களும் வறுமையுடன் போராடி அதை இருக்குமிடந் தெரியாது ஒழிக்கவேண்டுவது அவசியம் என்பதைக் கூறவும் வேண்டுமோ!

# தீபாவளி

சு. அ. ரா.



செப்பரிய புகழ்படைத்த தீபாவளி—இங்கு
சிந்தைமகிழ்ந் திடவினிது வந்த தம்மா!
ஒப்பிலாத சீர்த்திமிக்க தீபாவளி—நாமும்
ஓங்குமெண்ணெய் தேய்த்தாட வந்த தம்மா!
திப்பியநற் புகழ்படைத்த தீபாவளி—பெருமை
சிறந்தகதர் கட்டவிங்கு வந்த தம்மா!
இப்புவியில் இந்தநல தீபாவளி—எங்கும்
இலங்குதீப வரிசைசெய்ய வந்த தம்மா!

ஓங்குபுகழ் படைத்தநல தீபாவளி—உலகில்
உயர்ந்ததிரு நாளெனவே வந்த தம்மா!
தேங்குழலும் லட்டுகளும் தீபாவளி—மிகவும்
தின்பதற்கு நாடிஇங்கு வந்த தம்மா!
பாங்குமிக்க சிற்றுணவுத் தீபாவளி—பலமாய்
பாழ்வயிற்றை நிறைப்பதற்கே வந்த. தம்மா!
தூங்காம லேஇரவில் தீபாவளி—நமது
தோகையர்க்கு வேலைதர வந்த தம்மா!

புதுமணக்கா தலர்களுக்கித் தீபாவளி—மிகவும்
பொங்குமகிழ் வளிக்கஇங்கு வந்த தம்மா!
விதவிதமாய்த் திண்டியுணும் தீபாவளி—பின்பு
மிகப்பலருக் கசீர்ணம்தர வந்த தம்மா!
பதகன்நர காசுரனின் தீபாவளி—மனிதர்
பலரையசுரர் ஆக்குதற்கு வந்த தம்மா!
இதுவும்ஒரு பண்டிகையாம் தீபாவளி—மக்கள்
எல்லார்க்கும் இன்பம்தர வந்த தம்மா!

தன்னலமே மூட நம்பிக்கைக்கு அடிப்படை, பரந்த அன்பே......

# சீர்திருத்தத்திற்கு அடிப்படை

மு. வரதராசன், B. O. L., M. O. L.



மூடநம்பிக்கைகளும் கண்மூடிப் பழக்க வழக்கங்களும் எல்லா நாட்டு மக்களிடத்திலும் காணப்படுகின்றன. அவற்றை ஒழித்தல் வேண்டும் என்று அந்த அந்த நாட்டு அறிஞர்களும் முயன்று வந்திருக்கின்றார்கள். ஆனால் எந்த அளவில் வெற்றி பெற்றிருக்கின்றார்கள் என்று ஆராயும்போது, முயற்சிக்கு ஏற்ற பயனில்லை என்று கூறவேண்டியுள்ளது. இதனால் மூட நம்பிக்கைகளையும் கண்மூடிப் பழக்க வழக்கங்களையும் ஒழித்தல் இயலாது என்பது கருத்தாகக் கொள்வதற்கில்லை.

உலகத்தில் தோன்றிய உயிர் வகைகளுள் காக்கை குருவி முதலானவற்றின் பறக்கும் ஆற்றலிலோ ஒலிக்கும் முறையிலோ ஒரு முன்னேற்றம் ஏற்பட்டிருப்பதாகக் காணவில்லை. உலக வரலாற்றிற்கு எட்டிய மிகப் பழங்காலத்தில் அவை பறந்த அவ்வாறே இன்னும் பறக்கின்றன; அன்று ஒலித்தவாறே இன்றும் ஒலிக்கின்றன. யானை, மான் முதலிய விலங்குகள் அன்று வாழ்ந்த வாறே இன்றும் வாழ்கின்றன. இவ்வாறே மற்ற உயிர் வகைகளிடத்தும் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக முன்னேற்றம் ஒன்றும் காணவில்லை. ஆனால் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவாறு இன்று மக்கள் வாழவில்லை. அன்றிருந்த கருவிகள் வேறு; இன்றுள்ள கருவிகள் வேறு; அன்றிருந்த உடல் நிலை வேறு; இன்றுள்ள உடல் நிலை வேறு. அன்றிருந்த மன நிலை வேறு; இன்றுள்ள மன நிலை வேறு. ஆதலின், மக்கள் சீர்திருத்தத்திற்கு உரியவர்கள்; வளர்ச்சியும் முன்னேற்றமும் இல்லாமல் தேங்கும் உயிர்வகை அல்லர். சீர்திருத்த நோக்கம் கொண்ட பெரியோர் முயற்சி பயன் படாமற் போகவில்லை; பயன்பட்டே வந்திருக்கின்றது. ஆனால் அவர்கள் முயற்சி பெரிது; பயன் சிறிது எனக் கூறலாம்.

சீர்திருத்தத்தினைத் தொடங்கும் பெரியோர் சிலர். அதனைத் தொடர்ந்து நடத்துவோர் பலர். தொடங்கியவர் காலத்தில் இருந்த பயன் தொடர்ந்து நடத்தியவர் காலத்தில் மாறிவிடுகின்றது. புத்தர், ஏசுநாதர், முதலானவர் வாழ்க்கையில் இந்த உண்மையை உணரலாம். தொடங்கும் பெரியோர் பரந்த தூய அன்பு உடையவர்கள். தொடர்ந்து நடத்துவோர் அத்தகைய அன்பு கொள்வதில்லை; அவர்கள் தங்கள் முயற்சிக்கு அடிப்படையாக வேண்டுவது தூய அன்பு என்பதை உணராமல் தவறுகின்றார்கள்.

மூட நம்பிக்கைகளை ஒழிக்க வேண்டும் என்ற சீர்திருத்த உள்ளம் வாய்க்கப் பெற்றவர்கள், இன்றும் எவ்வளவோ முயற்சி செய்கின்றார்கள். அவர்களில் பரந்த நோக்கம் உடையவரும் உள்ளனர். குறுகிய நோக்கம் உடையவரும் உள்ளனர். இவர்கள் நோக்கத்தில் உள்ள வேறுபாட்டை எவ்வாறு அறிதல் கூடும்! இருவரும் செய்யும் முயற்சியில் தக்க வெற்றி பெறுவது இல்லை. அவர்கள் செய்யும் சீர்திருத்தத்தை உலகம் விரைந்து ஏற்றுக் கொள்ளுவதில்லை. தங்கள் முயற்சி வீணாவது கண்டு மனமாற்றம் அடைகின்றார்கள். அந்த மனமாற்றத்தால் தான் அவர்கள் நோக்கங்களின் வேறுபாட்டை உணரலாம்.

பரந்த நோக்கம் உடையவர்கள் மனம் எவ்வாறு மாறுகின்றது? உலக நன்மைக்காக உலகத்தைத் திருத்தவேண்டும் என்ற முயற்சி பயன்படாமல் போகவே அவர்கள் சோர்வடைகின்றார்கள். "எவ்வளவு பாடுபட்டும், எவ்வளவு நல்ல முறையில் பல உண்மைகளை எடுத்துச் சொல்லியும் மக்கள் கேட்கவில்லையே. நம் சுற்றத்தார் மனத்தையும் திருப்ப முடியவில்லையே. எந்தக் காலத்தில் எந்த முறையில் தான் இவர்களைத் திருத்துவது? உலகம் இப்படித்தான் இருக்கும் என்று சும்மா இருத்தலும் முடியவில்லையே" என்று சோர்ந்து நிற்கின்றார்கள். சமயம் வாய்த்த போதெல்லாம் சீர்திருத்தத் தொண்டைத் தொடர்ந்து செய்கின்றார்கள்.

குறுகிய நோக்கம் உடையவர்கள் மனமோ வேறு வகையாக மாறுகின்றது. "நாம் இவ்வளவு சொல்லியும் இவர்கள் மூட நம்பிக்கைகளை விட்டபாடில்லை. இவ்வாறு நல்ல முறையில் சொல்வதால் ஒரு பயனும் இல்லையென்று தெரிகிறது. இனி இவர்களை இகழ்ந்து பேசவேண்டும். இவர்கள் வாழ்விற்கு உதவி செய்தல் கூடாது. வேண்டியபோது இடையூறும் செய்தல் வேண்டும். இவர்களைச் சார்ந்தவர்களுக்கும் நன்மை செய்தல் கூடாது. இவர்களோடு சார்ந்து வாழ்தலும் தகாது. இவர்களை ஒதுக்கித் தள்ளல் வேண்டும்" என்று தமக்குள் பேசி, பிறகு பேசியவாறே அன்பின்றி வெறுப்பு மிக்கு வாழவும் முற்படுகின்றார்கள்.

பரந்த நோக்கம் உடையவர்கள் தங்கள் முயற்சி நிறைவேறாத போது சோர்ந்து நிற்கின்றார்கள்; பொது மக்கள் நிலையைக் குறித்து இரங்குகின்றார்கள்; சோர்வுக்கு இடையே இயன்ற வரைக்கும் தொண்டும் செய்கிறார்கள். ஆனால் குறுகிய நோக்கம் உடையவர்களோ வெறுப்புக் கொள்ளுகின்றார்கள். மக்களைப் பற்றிய நல்ல எண்ணத்தை இழக்கின்றார்கள். அவர்கள் வாழ்க்கையை இகழ்ந்து எள்ளுகின்றார்கள். முன்னவர் மனம் இறுதி வரைக்கும் மக்களிடத்தில் அன்பு கொண்டிருக்க, பின்னவர் மனமோ அந்த அன்பைக் கைவிடுகின்றது. மக்களிடத்தில் அன்புகொண்டு தன்னலம் அற்றுத் தொண்டு செய்தலே முதலிலிருந்து நோக்கமாகக் கொண்டவர்கள் முன்னவர். இறுதி வரைக்கும் தன்னலம் அற்ற அந்த அன்பு நிலைக்கின்றது. ஆனால் தன்னலத்தால் பிறந்த அன்போ குறுகிய எல்லையுடையது; தான் விரித்த வலைக்குள் தானே கட்டுண்டு மாயும் தன்மையது;

ஆதலால் பரந்த நோக்க மில்லாதவர் தொடங்கிய தொண்டு வெறுப்பியக்க மாக முடிகின்றது.

தன்னலக்காரர் தங்கள் குறையை உணர்வது இல்லை போலும். நெருங்கிப் பழகினால் அவர்களிடம் நுண்ணிய மூட நம்பிக்கைகள் குடிகொண் டிருத்தலைக் காணலாம். ஒரு காரண மும் இல்லாமல் ஒரு நிறத்தைப் போற்றுதல் மூட நம்பிக்கை அன்றோ? அவ்வாறே குறித்த ஓர் இடத்தைப் புகழ்ந்து அத னையே விரும்புதல் மூட நம்பிக்கை யன்றோ? இதுபோன்ற சிறு சிறு மூட நம்பிக்கைகள் எண்ணிறந்தவற்றை அவர்களிடத்தில் காணலாம். "இரும்புப் பிடியுள்ள குடையைப் பார்த்தாலும் எனக்கு வெறுப்புத் தோன்றுகின்றது." என்பார் ஒருவர். "செருப் பணிந்து நடக்கின்ற ஒலியைக் கேட்பதற்கும் எனக்குப் பிடிப்பதில்லை" என்பார் மற்றொருவர். "கருது வெளுத்த நாய் கனவிலும் வேண்டாம்" என்பார் மற்றொருவர். "உண்ணும் வேளையில் காக்கை கரைதலைக் கேட்டால் எனக்கு எப்படியோ இருக்கிற" தென்பார் இன்னொருவர். இவர்களுள் ஒவ்வொரு வரும் பிறர் மனப்பான்மையை வெறுத்துப் பழிக்கின்றனர்.

கருத்து வேறுபாட்டுக்கு இடம் தருதல் நாகரிகம். ஆனால் தாம் சொல்லும் கருத்தைப் பிறர் ஏற்றுக் கொள்ளாவிடில் அவர் மேல் சினங் கொண்டு பகை வளர்க்கும் மனப்பான்மை நாகரிகம் ஆகுமோ? எல்லா நாடுகளிலும் சீர்திருத்தம் செய்ய முனைகின்ற இளைஞர்கள் அத்தகைய மனப்பான்மை உடையவர்களாகவே இருக்கின்றார்கள். தாங்கள் சொல்லுவதை உலகம் கேட்க வேண்டும் என்ற ஆர்வத்தால், உலகத்தில் கருத்து வேற்றுமை உண்மையையே மறந்து விடுகின்றார்கள். தங்கள் சொல்லைக் கேட்டு ஆம் என்று தலை அசைக்காதவர்களை மூடர்கள் என்றும் கோழைகள் என்றும் தூற்றுகின்றார்கள். இவர்கள் கருத்துலகத்தில் சீர் திருத்தம் பெறாத இளைஞர் கள் மூட நம்பிக்கை இவர்களிடத்தில் வேறு வடிவில் வீற்றிருக்கின்றது. இவர்களிடத்தில் அடிக்கடி வழங்குகின்ற சில சொற்களும் பயில்கின்ற சில செயல்களும் நாளடைவில் இவர்கள் மனத்தில் செல்வாக்குப் பெறுகின்றன. அந்தச் சொற்களையும் செயல்களையும் கேட்டபோதும் கண்ட போதும் இவர்களுக்கு ஒருவகை மகிழ்ச்சி; எழுச்சி. அவற்றைக் கேளாத போதும் காணாத போதும் ஒருவகை வெறுப்பு; சோர்வு. இறுதியில் அவை என்ன ஆகின்றன? அந்தச் சொற்கள் மந்தி ரங்களாக, அந்தச் செயல்கள் சடங்குகளாக அவ்வளவு போற்றப் படுகின்றன. ஆனால், மந்திரங்கள் என்றும் சடங்குகள் என்றும் அவற்றிற்குப் பெயரிடுவது இல்லை. இதுதான் வேறுபாடு.

கருத்து வேற்றுமையை மதித்தலே பெரிய சீர் திருத்தம். இச் சீர்திருத்தம் செய்துகொள்ள அறிஞர்கள் பலரால் இன்னும் இயலவில்லையானால், அறியாமை நிறைந்த மக்கள் வாழ்க்கையை சீர் திருத்துவது எங்கே? அறிந்தவர் அறியா தார் என்னும் இருவகையா ரிடத்திலும் உள்ள தன்னலமே சீர் திருத்தத்திற்குத் தடையாக நிற்பது. தன்னலம் அற்றால் மூட நம்பிக்கை ஒழியும்; சீர் திருத்தம் வரும். தன்னலமே மூட நம்பிக்கையின் அடிப்படை. பரந்த அன்பே சீர் திருத் தத்தின் அடிப்படை.

தான் காதலித்த பெண்ணை மணக்க முடியாதபடி பெற்றோர்கள் பலவந்தப் படுத்தி வேறொரு பெண்ணைக் கட்டி வைத்தார்கள். மனதுக்குப் பிடிக்காத அந்த மணவாழ்க்கையில் கட்டிய மனைவி மடிந்து போனாள். பழையபடியும், காதலித்த பெண்ணோடு குலாவலாமே என்று நினைக்கலாம். அது எப்படி முடியும்?

# இனி......?



நா. கணபதி.



அன்பு மிகுந்த நீலா!

நீண்ட நாளாக நீ, கடிதம் எழுதாமல் இருக்கும் காரணம் என்ன? கரம் வலிக்க எழுதின இக் கடிதத்திற் காவது பதில் எழுதுவாய், என்று நம்புகிறேன். இளம் வயதிலே நான் அடைந்த அல்லலின் பின்னலே இக் கடிதம். புண்பட்டு, புரையோடிய என் மனம் முன்போல், இன்பத்திற்குப் பணியுமென்று நீ நினைக்காதே. நானொரு தேய்ந்த லாடம். என் வாழ்க்கை இவ்விதம் அழிந்து, பொசுங்கி விடும் என்று ஒரு நிமிடமாவது, நான் எண்ணவில்லை! சென்ற சில மாதங்கட்கு முன், நீ ஒருகடிதம் போட்டாய். அதிலே,

"......முன் போல் தாங்கள், அடிக்கடி கடிதம் போட மாட்டீர்கள். தங்கள் புது மனைவியோடு கலந்த பின், தங்கள் நெஞ்சில் இந்த நீலாவின் நினைவு துளிகூட இருக்காது என்பது திண்ணம். எத்தனையோ கடிதங்கள்—அதில் 'உன்னைத்தான் மணப்பேன்', என்று லட்சம் சத்தியங்கள் செய்தீர்கள். அப்போது என் இதயம் அடையும் பூரிப்புத்தான் என்ன! நான் மட்டும் உங்களை, இப்படி ஏமாற்றி யிருந்தால் வெளியில் தலை காட்ட முடியுமா? அப்போது தங்களுக் கிருக்கும் கோபம், என் உயிரோடு கூட நிற்காது. அன்று அதிகாலையில், ஆற்றுப் பிள்ளையார் கோவிலுக்குள் வைத்து 'நீலா, நீ தான் என வாழ்க்கைத் துணைவி என்று, நான் திட்டமாகச் சொல்லுகிறேன். இந்த வைகறையில் நான், உன் கையி லடித்துக் கொடுத்த சத்தியம், ஆற்றில் மிதக்கும் நீர் நுரை யல்ல என்று நினைத்துக் கொள்' என்று கூறியது தங்களை உறுத்தாவிட்டாலும் என் நெஞ்சை வாள் கொண்டு அறுப்பதாக இருக்கிறது.

"இப்போது இந்த நீலா, ஆதரவு இழந்த, சிற கிழந்த வண்டு போலானாள். இனி நல்ல ஆழமுள்ள ஆறு தான், என் வேகும் ஆத்மாவை, அரவணைத்துக் கொள்ளும். அதுவும் தங்களைப் போல் அல்ல!! நித்திய உலகில் எத்தனையோ ஆத்மாக்களுக்கு, சாந்தி அளிக்கும் சாவுதேவி, என்னை வாரி அணைத்துக் கொள்ளும் புண்ணிய தினத்தை எதிர் பார்த்துக் கொண் டிருக்கிறேன். அந்த சாந்த ஜோதியின் வருகை விரைவில் நெருங்க வேண்டுமென்று நினைவிலும் கனவிலும் பிரார்த்தித்துக் கொண் டிருக்கிறேன்" என்று மன முருகி எழுதி யிருக்கிறாய்.

நெஞ்சில் மிளிரும் நீலா !

நித்திய உலகில் நிகழும் அத்தனை அதிசயத்திற்கும், ஒரு தனி மனிதன் காரணமாக இருக்க முடியாது. என் உள்ளம் உன் மலர் மேனியைத் தழுவ வேண்டுமென்று துடியாய்த் துடிக்கிறது, கரை மேல் துள்ளும் நீர் மீன் போல. பெற்றோர்களுக்கும், சுற்றத்தார் களுக்கும் தான் சந்தோஷம். மகனை மணமகளோடு வைத்துப் பார்க்கும் காட்சியைக் கண்ட மகிழ்ச்சி தாயின் உடலைக் குலுக்கி விட்டது. ஆனால்! என் மனம் பட்டபாடு, யாருக்குத் தான் தெரியும்? எனக்குத் தேர்ந் தெடுக்கப்பட்ட மனைவி, ஐயோ! அவள் ஒரு கோர ஸ்வரூபம்! தாய் தந்தையர் தேர்ந்து எடுத்த அப் பெண்ணைக் கண்டவுடனே, என் நெஞ்சு ஆயிரம் சுக்கல்களாய் வெடித்து விட்டது. என் விதியா இது?

வயிரத்தையும், வர்ணப் புடவையையும். வித விதமான நெளிவு ரவிக்கையையும், ஆயுதமாகக் கொண்டு என் உள்ளத்தை வசியப் படுத்த முடியும் என்பது, அப் பேதையின் அபிப்பிராய மன்று! சுற்றி யிருக்கும் காக்கைக் கூட்டத்தின் குருட்டுத் தீர்ப்பு. கற்பனையிலும் சிந்திக்க முடியாதபடி, சிங்காரித்தாள். அத்தனை சிங்காரமும் என் கண் முன் வெறும் மத்தாப்பாய்த் தோன்றி மறைந்தது. வருத்தப் பொறிகளை வாரி வீசி விட்டு, நாட்களும், மாதங்களும் மறைந்தன. உணவிலும் உறக்கத்திலும் உன் கட்டழகு பொங்கி வழியும் எழில் கரங்கள் என் நெஞ்சைத் தட்டி எழுப்பி விடுகின்றன. அந்த நேரத்தில் காதல் கொதிப்பால், பைத்திய காரனாகி விடுகிறேன். அவள் "படுத்துக் கொள்ளுங் கள்" என்று மன முருகிக் கூறினாள். முன் இருந்த பயித்தியம் அந்தப் பதத்தால் அளவை மீறிவிட்டது.

உண்மையில் நானொரு காதல் பைத்தியம். இரவுகளில் உன்னை நான் எண்ணிப் பட்ட துன்பங்கள் கொஞ்ச நஞ்சமல்ல! அவள் தான் என் மனைவி. அவள் பொறுமையின் உருவம். அவளைக் கண்டவுடன் கோபப்பட மாட்டேன். நெருப்பில் நெளி யும் புழுப் போலத் துடிப்பேன். என்னுடைய மனைவியைத் தேர்ந் தெடுப்பது நான். அதுதான் நீதி. ஆனால், சமூகம் பெண்களைச் சந்தைக் கூட்டம் என்று மதிப்பிடுகிறது. அப்படிப்பட்ட சந் தைக் கூட்டத்தில் எடுத்த மனைவியைக் கண்டதும் உள்ளம் மயங்கவில்லை— மருளுகிறது. உலகம் கூறும் ஓட்டைச் சட்டங் கள் எனக்குத் தேவையில்லை.

முந்திய பழக்கம், ஒரே மனம், காதல் பண்பில் திளைத் தோம் என்ற ஊக்கத்தால் தான் என் வாழ்க்கை மர்மங்களை மறையாது வரைகிறேன். என் வாழ்க்கையில் உருண்ட, சம்பவங் கள் உன் எதிர் கால ரதத்திற்கு, ஒவ்வொரு சக்கர மாகலாம். நீ என்னைத் திட்டுகிறாய்—நான் யாரைத் திட்டுவது? துக்க அனல் பிழம்பால் என் இதயம் வெந்துவிட்டது. சமூக சதிக்குப் பலியான என் மனைவி மாதுளை மொக்குப் போன்ற மோகன வடிவ மல்ல

சுத்த கருப்பான வர்ணம். புத்தகங்களில் குரூபி என்ற வார்த்தையைக் கண்டவுடன் என் பாழ்பட்ட மனம், என் மனைவியின் வடிவத்தை குறிப்பிடும் கோர வார்த்தை என்று, வீணுக அலறித் துடிக்கிறது. இருட்டுடன் பிறந்த பிறவியா என் மனைவியாய், வரவேண்டும்? வேதாந்தி கூறுவான்: ''ஆண்டவன் அருளியது அவ்வளவுதான். நிறைய ஆசை கொண்டால், மீளா நரகம் தான் கிடைக்கும்'' இப்படிக் கூறிய வேதாந்தி இப்போது என் எதிரில் வந்தால், அப்படியே விழுங்கி விடுவேன்! அவ்வளவு கோபமும் ஆத்திரமும் என் உள்ளத்தில் ஆருய்ப் பெருகிவிட்டது. இத்தனைக்கும் காரணம் என் தந்தைதான். அவருடைய போக்கை அதிகமாக வரைய எனக்கு விருப்பமில்லை.

இப்போது நம்மிருவருக்கும் விவாகமாய் இருந்தால் எத்தனை இன்ப அலைகள் நம் உள்ளக் கடலில் எழுந்து கூத்தாடும். அப்படிப்பட்ட அரிய சந்தர்ப்பங்களை, வரவேற்பதுதான் நம் சமூகத்தில் கிடையாது. மறு ஜென்மத்திலாவது இந்தச் சிக்கல் இல்லாது சேர்ந்து வாழ வேண்டு மென்று ஆண்டவனை இருதய பூர்வமாகப் பிரார்த்திக்கிறேன். சமூகக் கனலினுல் எத்தனையோ யௌவன இருதயங்கள் எரிந்து வெந்து சாம்பலானது போலவே, என் மனைவியின் நிலைமை. பெண் குலம் சமூகக்கனல் காற்றுப் பட்டுக் கருகித் தீய்கிறது.

அக் கனல் மாறும் நன்னுள் எந் நாளோ? அந் நாளில் என் இதயம் அடையும் பூரிப்பு அளக்க் முடியாத ஆகாயத்தைப்போல் தான்! இதற்குமுன் வரைந்த சம்பவங்கள், எல்லாம் உன் உள்ளத்தைத் தொட்டிருக்காது. பின்னுல் வரும் அம்சம் மிகப் பயங்கரமானது. வருத்தமும் கூட. அச் சம்பவத்தால் இரவில் நான் மாடியில் தூங்கமாட்டேன். அந்த மாடி தான் அவள் சாவிற்கு, முதல் காரணம், ஐயோ! நான் இந்தக் கடிதம் எழுதி முடிப்பதற்குள் எத்தனைதரம் பயந்தேன். இன்னும் கூட என் நெஞ்சு 'பட பட' வென்று பயத்தால் அடித்துக் கொள்கிறது! உன் மனத்தைத் திடப்படுத்திக்கொள். அந்தி சூழும் வேளையில், நான் மாடியில் 'ஈஸிசேரில்' சாய்ந் திருந்தேன். அவள் வரும் சத்தம் கேட்கவே, நான் கண்களை மூடிக்கொண்டேன். பின்புறமாக வந்து அவள், என் கண்களைப் பலமாக்ப் பொத்திவிட்டாள். கோபம் மீறி "சீ! உன் கரிக்கையாலே என்னை ஏண்டி தொட்டே! சனியனே! ஒழி!!" என்று தாறுமாருகத் திட்டிவிட்டேன். அவ்வளவு தான் விம்மிக் கொண்டே போய் விட்டாள். ஆம்! கண்ணீரும் கம்பலையுமாய் அவள் மறைந்துவிட்டாள் கோடைகால மின்னல் போல. இப்போது என் மனம் கடல் அலையின் கீழ் புரளும் மணலாய் விட்டது. குற்றமற்ற நிரபராதியை, அநியாயமாகத் திட்டிய என் நாக்கில் லட்சம் விஷ ஊசிகளை இறக்கினுல் கூட போதாது. நான் அழுதுவிட்டேன். என் மனமே ஒடிந்துபோய் விட்டது. நிலை கொள்ளவில்லை. வீட்டைவிட்டு எங்கோ கிளம்பிவிட்டேன், தூங்க முடியாத துக்கத்தால். வெகுநேரம் கழித்தபின் வீட்டிற்கு

வந்தேன். ஒரே கூக்குரலும் அழுகையும் என் இருதயத்தைப் பிளந்தது. நடுநிசியில் தான், இந்தப் பயங்கரப் புயல்.

பைத்தியம் பிடித்தவன் போல, உள்ளே ஓடினேன். குளிக்கு மறை முன் என் தாய் புரண்டுகொண்டு, புழுவாய்த் துடித்துக் கொண்டிருந்தாள். குளிக்கு மறைக் கதவைஉடைத்தனர். உள்ளே என் மனைவியின் உடல் கயிற்றில் ஊசலாடுகிறது. அவள் ஆவி அநியாயமாகக் கயிற்றில் கழிந்துவிட்டது. தற்கொலை என்ற பட்டம், இன்னும் மறையவில்லை. ஊர் உதட்டின் அவச் சொல்லுக்கு என் மனைவிதான் சரியான கருவியானாள். பத்துத் தினங்கட் கப்புறம் நான் கட்டிலில் கிடப்பதும், என் முன் பலர் அநுதாபப் படுவதும் ஞாபகத்திற்கு வந்தது. இன்னும் என் உள்ளத்தை அவள் மரணம் ரம்பம் கொண்டு அறுப்பதுபோல அறுக்கிறது.

என் மனைவியின் உடல் சாம்பலாயிற்று. மனித முடிவே அதுதான். அதற்கு யாரும் தப்ப முடியாது. ஆனால் என் மனைவியின் வயதைக் காலக் கரையான் இன்னும் அரித்துத் தின்ன வில்லை. உலகில் அவள் மடிய வேண்டிய பருவமா இது, நீலா? உடல் தேயவில்லை, கண் ஒளி குறையவில்லை. அதற்குள், தேயாத அவள் சரீரம் என்னவோ மடிந்துவிட்டது. ஆனால் அவளுடைய நினைவு மடிந்ததா? அவளுடைய மரணத்துக்குக் காரணமா யிருந்த என் வேதனை மடிந்திருக்கிறதா? இந்தவித மர்ன நிலையில் என் வாழ்வில் இனி காதலைப் பற்றிச் சிந்திப்ப தற்கு என் உள்ளம் தான் முற்படுமா? என் பெற்றோர்கள் நம் காதலைப் பலியிட்டு அந்த அபலையையும் பலியிட்டுவிட்டார்கள். இப்பொழுது அரைகுறையாக அவர்களால் பலியிடப்பட்ட நம் காதலை நான் முற்றிலுமே.........வேறு விதத்தில் என் மனதைத் திருப்ப முடியவில்லையே, நீலா.

இப்படிக்கு
உன் அன்பன்,
**உமாமகேசுவரன்.**

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

சி. பி. ஆனந்தம்



## ஆத்ம ஞானிகள்

'யுரேனஸ்' கிரகத்தின் செல்வாக்குகளுக்கு உட்பட்ட விதியுடையவர்களில் ஒரு சிலரே உலகம் அறிந்து கொள்ளும்படியான நிலைமையில் பிரகாசித்து வருதல் கூடும். இவ்விதமான பிரகாசம் எதுவுமின்றி இருப்பவர் அநேகர். கீர்த்திப் பிரபலங்களில்—அவ்வழி வரும் ஆடம்பரங்களில் இவர்களுடைய **'விதிச் சக்கரம்'** (Wheel of Destiny) சுழலுவதில்லை. ஆயினும், யுரேனஸின் களங்கமில்லாத இயல்களில் வரும் செல்வாக்குகளினால் பரிசுத்தம் நிறைந்த ஞானவான்களாகப் பெரும்பாலும் அவர்கள் இருப்பார்கள். பலவகைகளிலும் கறைப்பட்ட ஜனசமூகத்தின் திருஷ்டிக்கு இவர்கள் அகப்பட மாட்டார்கள். இவர்களைச் சுற்றி நிகழுவன ஒவ்வொன்றிலும் இயற்கைச் சூழலின் பெரிய இரகஸ்யங்களை இவர்கள் உணர்ந்துகொண்டே செய்வார்கள். ஆழமாக அலசிப் பார்க்கும் சுபாவம்—அல்லது தீர்க்கமாகச் சிந்தனை செய்யும் இயல்பு இவர்களிடம் இயற்கையாகவே இல்லாவிடினும், இவர்களிடமுள்ள தூய்மையான உயர்திருநோக்கு அவ்வழிவரும் உயர்ந்த பொருளையே உணர்த்தும் வாழ்வில் நேருகிற சாதாரண சம்பவங்களும்கூட அவர்கள் விஷயத்தில் பரிசுத்தம் வாய்ந்த ஞானவழியைத் திறந்துவிடுகின்றன. இவ்வழி யுரேனஸின் விசேஷ செல்வாக்கின் பலத்தினால், இவர்கள் ஆன்ம ஒளியின் பூரணவிலாஸத்தை நெருங்கிக் கொண்டிருப்பவர்கள் இந்த நிலையுடையவர்கள் எவருக்கும் ஸித்திபாவங்கள் (Places of achievements) என்னும் பாஸ—பரங்கள் இந்தக் கிரகத்தின் செல்வாக்குக்கு உட்பட்டிருப்பதைக் காணலாம்.

கேந்திரங்கள் நான்கிலும் உதயத்தில் (முதலாவது பாவத்தில்) இதன் ஸ்திதிக்கு (Location or Position) ஒருவருடைய விதியைக் கட்டுப்படுத்தும் செல்வாக்கு உண்டாகிறது. உதய பாவத்தில் அதன் மத்யபாகையை அடுத்து எழுந்து கொண்டிருக்கும் (Rising) நிலைமையில் யுரேனஸுக்கு ஒருவருடைய விதியை முழுவதும் ஆளும் பலம் நேருகிறது. இத்தகையோர்களுடைய வாழ்வின் ஒரு பாகம் சென்று கொண்டிருந்த போக்கை அடுத்த பாகத்தில் அடியோடு மாற்றிவிடும். இந்த நிலை இவர்களுக்கு வாழ்வின் நடுவில் பெரும்பாலும் நேரும். இவ்வழி வாழ்வின் முற்பகுதி அநேகமாகத் தொடர்ந்த தோல்விகளும்—பெரியஏமாற்றங்களுமே நிறைந்ததாக விருக்கும். வஞ்சனை என்பது இன்னதென்று அறியாத இவர்கள் எளிதில் தவிர்க்க முடியாத வஞ்சனைகளுக்குப்

பலியர்வார்கள். முதலீடுகள் (Investments) முழுவதும் நஷ்டமாய் விடும். பரிசுத்தமான அன்பும்-அனுதாபமும் (Pure Love and sympathy) இவர்களுடைய ஜீவன். களங்கமற்ற வானம்போல விரிந்த உயர்நோக்குடைய இவர்கள் இதயத்தில் எவருக்கும் இடமுண்டு. பகைவர்களுக்கும் பரிவு கொள்ளும் பேருள்ளம் படைத்தவர்கள். துன்பமே தொடராத இன்பக் கோட்டை இவர்களுடைய லக்ஷியக் கனவு.

வாழ்வின் பிற்பகுதியில் அமைதியும்—சமாதானமும் நிலைபெற, முடிவில்லாத போராட்டத்தில் ஈடுபட்டவர்களாக விருப்பார்கள். இந்த நிலையில் உலகம் இவர்களை உணர்ந்தும்—உணராமலும் பெரிய நன்மைகளைப் பெற்றுக் கொண்டிருக்கும். பதிவுக்குரிய இவற்றின் முற்போக்குகளின் படிப்படியான பெருக்கம் கீர்த்திக்குரிய பிரபலங்களில் இவர்களைச் சிறக்கும்படி செய்யும். ஆனால், இதுவேளை இவர்கள் முன்னே குவிந்து கிடக்கும் ஸித்திகளில் திருப்தி யடையாதவர்களாய் மேலும்-மேலும் பெரிய ஸித்திகளை நோக்கி முயற்சி கொண்டவர்களாக விருப்பார்கள். இவ்விதம் லக்ஷயஸ்தானத்தச் சென்றடையும் பயணத்தைமுடித்து விடாத 'ஞானிகள்' இவர்கள் என்று கூறலாம். இவர்களுடைய சித்தாந்தங்களும்—அனுஷ்டானங்களும் நூதனமானவைகளாகவே இருக்கும். இவர்களுடைய கொள்கைகள எவருக்கும் புரியமுடியாத மர்மங்களாய்—ஆனால், உலகை மிகவும் கவர்ச்சியுடன் ஆகர்ஷித்துக் கொண்டிருக்கும்.

அனி பெஸன்ட், சீரியோ (Cherio), பாபு அரவிந்தர் இவர்களெல்லாம் யுரேனஸின் செல்வாக்கினால் கட்டுப்படுத்தப்பட்ட விதியுடையவர்கள். உலகம் அறிந்த இவர்களிடம் மேலே கூறியன அனைத்தும் உண்மையாக விருப்பதைக் காணலாம்.

இவர்களில் முதல்வர் பிரமஞானி; இரண்டாமவர் ஒரு தீர்க்கதரிசி; மூன்றாமவர் பெரிய ஹடயோகி. இம் மூவரும் தம்தம் சித்தாந்தங்களில் பல நூற்களை உலகிற்கு வழங்கியிருக்கின்றனர். இவர்களுடைய வாழ்வின் பிற்பகுதியே அதிகம் உலகப்பிரஸித்திக்கு உரியது. மூவருக்கும் சுபக்கிரக ராசியே உதயத் தலம். அதில் யுரேனஸ் ஸ்திதிபெறுகிறது. மூவர்களுடைய துறைகளும் வேறுவேறாகத் தோன்றிய போதிலும், மொத்தத்தில் ஞான ஸித்தியே அவற்றின் லட்சியமாக விருக்கின்றது. இதற்கு உதவு வதையே பிரதமமாகக் கொண்ட யுரேனஸ் ஞானகாரகனே. இந்த எல்லையில்—இந்த உயர் நோக்கில் யுரேனஸ் ஒரு சுபக்கிரகமே.

---

நம் நண்பர் அந்தத் தகரக் கடைத் தம்பதிகளுக்கு உதவியாக ஒரு பத்து ரூபாய் தானம் செய்ய ஒரு வழி செய்தார். அது பிரயோஜனமற்றுப் போய் அவர்கள் இவருக்கு உதவி செய்ய ஆரம்பித்து விட்டார்கள். எப்படி இருக்கிறது அன்பர் பணி!



# சுகநேரம்

எம். சாம்பசிவம்.

முள் செடியி லிருந்துதான் வாசனை மிக்க—அழகில் சிறந்த ரோஜா மலர்கள் தோன்றி இளந்தென்றலில் சாய்ந்தாடுகின்றன. பலவித துன்பங்களுக்கிடையே தான் இன்பமும் சற்று தலை காட்டுகிறேனென்கின்றது.

நிழலின் அருமை தெரிய வேண்டுமானால் வெயிலிலல்லவா அடிபட்டு வரவேண்டும்!

நான் நினைத்தேன், அந்த ஏழை வீட்டில் இன்பமே இருக்காதென்று. ஆனால், அங்கிருக்கும் மகிழ்ச்சி, இன்பநிலை கோடீஸ்வரன் வீட்டிலேது?

கடைத்தெருவின் கோடியிலே இருக்கும் அந்தத் தகரக் கடை, இரக்கமுள்ள நெஞ்சங்களை மேலும் கசக்கி முக்கிச் சாறு பிழிந்து விடுகிறது.

அந்தத் தகரக்கடை, ஒரு சிறு குடிசை; முறிந்து போன தகர விளக்குகளை ஒன்று சேர்த்துச் சீராக்குமிடம், அது; இன்னும், குப்பைத் தகரங்களையும் அந்த இடம், என்னவோ செய்து விடுகிறது!

அந்தத் தொழிற்சாலையிலே முதலாளிகள்—தொழிலாளிகள் எல்லாம் இருவரே—கணவனும் மனைவியும்—கிழங்கள்!

அந்த இரு முகங்களிலும், உலகம் இப்படிப்பட்டதென்பதை நிதானித்துக்கொண்ட அனுபவ ரேகைகள், குறுக்கும் நெடுக்குமாகப் பின்னிக்கொண்டு கிடந்தன; வார்த்தைகளும், பரிபக்குவ மடைந்திருந்தன.

அவர்களின் ஒரு முழு நாளைய வருவாய் இப்பொழுது ஆறு அணைக்களுக்கு உயர்ந்து இருக்கின்றன. அவர்களை எப்பொழுது வேண்டுமானாலும் அங்கே சதா பார்த்துக் கொள்ளலாம்.

அந்தக் கிழவி, துருத்தியை உலைக்களத்தில் செருகப்பட்டுள்ள உலையாணி சிவக்கும்படி ஊத வைப்பாள். உலையாணி சிவந்ததும் கிழவன், அதை எடுத்து ஈயத்தைக் கரைத்துத் தகரங்களை ஒட்ட வைப்பான்.

அவர்களின் வாழ்நாளிலே எத்தனை கோடி குடும்பங்களின் விளக்குகளை அவர்கள் சீர் செய்து எரிய விட்டார்களோ? அதனால்தான் கடவுள், அவர்களுக்கு ஆறு அணு படி யளக்கிறார்!

சில சமயங்களில் 'வேலை' வராமலிருக்கும். அப் பொழுதெல்லாம் கிழவனும், கிழவியும் கந்தல் தகரங்களை வைத்துக்கொண்டு என்னதான் செய்வார்களோ? லொட்டு, லொட்டு என்று சத்தம் தான் கேட்கும்: பரம சிவனுக்குப் படியளக்கும்படி தந்தி யடிக்கும் வேலையா, அது?

ஒருநாள் பதினொரு மணிவரை அவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை; அதனால், அவர்கள் கலங்கவுமில்லை. எதிரும் புதிருமாக உட்கார்ந்து, நடுத்தெருவில் கவலை யற்று மேயும் புறாக் கூட்டங்களைக் கண்டு புன்முறுவல் செய்துகொண்டு கூர்ந்து நோக்கினர். வைத்த கண் எடுக்காமல் பார்ப்பதற்கு அங்கு என்னதான் இருந்ததோ! நாம், 'செடி நட்டவன், நீர் ஊற்றுவான்' என்று, புஸ்தகத்தில் படித்திருக்கிறோம். அவர்கள்?

பன்னிரண்டு மணி யிருக்கும். நாலைந்து விளக்குகளைத் தூக்கிக்கொண்டு ஒருவன் அங்கே ஓட்டைகளை அடைத்துக்கொண்டு போகலா மென்று வந்தான். குறைந்தது இரண்டரை அணுவாகிலும் அதில் இருக்கும். கிழத் தம்பதிகள் அதற்காக மகிழ்ச்சியடைந்ததாகவோ, வெறுப்புப் பூண்டதாகவோ அவர்களின் முகத்தில் அறிய முடியவில்லை. அதற்குப் பதிலாக வழக்கம்போல் பொறுமையாகவே காரியத்தை ஆரம்பித்து விளக்குகளைப் புதுக்கினார்கள்.

வேலை, முடிந்தது. விளக்குக்காரன், 'எவ்வளவு, ஆச்சி?' என்று கேட்டுக்கொண்டே முடிச்சை அவிழ்த்தான்.

"ரெண்டணு, ரெண்டரையணு ஆவும்; முடிஞ்ச மட்டும் குடு."

"ஒண்ணே முக்காலணுதான் இருக்கிறது; புடிங்க."

கிழவி வாங்கிக் கோணிக்குக் கீழே போட்டுக்கொண்டு, தலையைச் சொறிந்தவாறே, வீதியை நோக்கினாள். வந்தவன், கிளம்பினான். அவன் பின்புறத்தில் இன்னொரு 'காசு முடிச்சு' தொங்கிக் கொண்டிருந்தது. கிழங்களின் அனுபவத்தில், அந்த விஷயம், இதோடு இரண்டு லட்சத்து ஐம்பத்தாருவது தட்வையாகத் தெரிந்தது. அதனாலென்ன? பரவாயில்லை!

அந்தக் கிழங்களின் தலையில், இனி, இடி விழுந்தால் கூட அவர்களுக்குத் திடுக்கிடும் உணர்ச்சி என்னவோ ஏற்பட்ப்

போர்வதில்லை. ஒருக்கால் அவர்கள் மீண்டும் பிறந்தால் உண்டாகலாமோ, என்னவோ!

நான் நினைக்கிறேன்: அவர்களின் நிலைதான், "இன்ப நிலை" என்று: எந்த விதமான சம்பவங்களும், அவர்களைக் கவலையில் ஆழ்த்தவில்லை; இன்பத் தொல்லையில் ஈடுபடுத்தவில்லை. கடமையைப் புரிந்து கடமையையே போற்றுகிறார்கள். அவர்கள், ஆசையால் ஏமாற்றம் அடையவில்லை; வெறுப்பால், நிம்மதியை இழக்கவில்லை.

காடு எப்படிப்பட்டது என்பது அவர்கள் அறிந்து விட்ட விஷயம்; அதனால், காட்டுக்குள் நுழைய அவர்களுக்கு விருப்பமில்லை; காட்டு முள்களும் அதனாலேயே அவர்களின் காலைத் தேடிக்கொண்டு வந்து தைப்பதும் இல்லாமற் போயிற்று. முள் தைத்துக்கொண்டு அவதியுறும் நேரத்தை நோக்க, முள் தைத்துக் கொள்ளாமல் சும்மா இருக்கும் நேரமே, "சுகநேரந் தானே!"

நான், அவர்களின் சமாசாரத்தை யெல்லாம் தெரிந்து வைத்துக்கொண்டு, அவர்களுக்காக விசனப்படுவது அவர்களுக்குத் தெரியுமோ. தெரியாதோ! விசனிப்பது மட்டும் உண்மை; அந்த விசனம், நியாயமா அநியாயமா என்பது இன்றுதான் தெரிந்தது:

ஒரு பையனிடம் பத்துரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்து, "பையா! அதோ அந்தத் தகரக் கடையில் இந்த நோட்டைக் கொடுத்து, சில்லரை கேள். சில்லரை இல்லையானாலும், 'இதை வைத்துக்கொண்டு நாலணா வாகிலும் அல்லது இரண்டணாவாகிலும் வாங்கி வரச் சொன்னார். பிறகு சில்லரையைத் திருப்பிக் கொடுத்து விட்டு நோட்டை வாங்கிக் கொள்கிறேன் என்கிறார்' என்று சொல்; கொடுப்பார்கள். நோட்டைக் கொடுத்துவிட்டு, கொடுக்கும் சில்லரையைச் சட்டென்று வாங்கிக்கொண்டு வா. ஓரணா உனக்குத் தருகிறேன்" என்று அந்தப் பையனை அனுப்பி விட்டு. சுமார் ஒரு பத்து கஜதூரத்தில் நின்றிருந்தேன், எங்கோ பார்த்துக்கொண்டு—ஆனால், அதையும் கவனித்துக்கொண்டு, பையன் திரும்பி வந்து, நான் கொடுத்த நோட்டையும், அவர்கள் கொடுத்த நாலணாவையும் என் கையில் வைத்து, "உங்களை அவர்களுக்கு அடையாளம் தெரியுமாம். தினந்தோறும் இந்த வழியாய்த்தான் போவீர்களாம். ஆனபடியால், பதிலுக்கு நோட்டு வேண்டாமாம்; பிறகு சில்லரையை மட்டும் திருப்பிக்கொடுத்தால் போதுமாம். எங்கே எனக்கு அணா! சீக்கிரம்" என்றான் பையன்.

இதற்கு என்னென்பது! ஒருக்கால் நான் செய்தது ஏதேனும் 'சூழ்ச்சி' என்று அவர்கள் நினைத்துக் கொண்டார்களா? அப்படியானால், இந்த நாலணாவை ஏன் கொடுத்தனுப்ப வேண்டும்? ஒருக்கால் ஏதேனும் நான் தீங்கு செய்து விடுவேனென்றா? அல்லது இதையும் கடமையென்று செய்திருப்பார்கள்? என்றெல்லாம் எனக்குள் குழம்பிக்கொண்டு, அந்தப் பையனுக்கு அணா

வைக் கொடுத்துத் துரத்தினேன். அந்தப் பையன் குதித்துக் கொண்டு ஓடினன்; அதுதான், இன்பமா?

எனக்கு எதில் குறை? நான் ஏன் இப்பொழுது இங்கு குழம்பவேண்டும்? ஒருக்கால் இதுவேதான் இன்பமா? பின், எது? சீ! இந்த உலகத்தில் ஒன்றுமே புரியமாட்டேனென்கிறதே!

அந்த நாலணவை எடுத்துக்கொண்டு, மீண்டும் அதே தகரக்கடைக்குச் சென்றேன். அந்த நாலணவை அவர்களிடம் கொடுத்து, "அந்தப் பையனை வேறு இடத்திற்கு அனுப்பினேன். அவன், இப்படி என்னவோ செய்துவிட்டு ஓடிவிட்டான்; வருகிறேன்" என்று ஓர் பொய்யைக் கூறிவிட்டுக் கிளம்பினேன்; என் மனம் எங்கெங்கோ ஓடித் திரும்பியது; அவர்கள் பதில் என்ன சொன்னர்கள் என்று கூட நான் கவனிக்கவில்லை; 'தானம்' செய்யப்போன லாபம், இது!

"கற்புடைய மனைவியொடு வைகினும் தாமரையிலை
மருவுநீர் என வுறுதல்."

என்பது, இவர்கள் விஷயத்தில் தொழிலிலும் பங்கெடுத்துக் கொண்டிருக்கின்றதே! இதுதான், இன்ப நிலையோ? ஏழ்மை தான், இன்ப நிலையோ?

"அன்பர் பணி செய்யவெனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே."

இதிலே, 'அன்பருக்குப் பணி செய்யும் நேரமே, இன்ப நேரம்; சுக நேரம்' என்கிருர் தாயுமானவர். இதைத்தான் அந்தத் தகரக் கடைத் தம்பதிகள் தெரிந்துகொண்டு உலகத்தைத் திணற அடிக்கிருர்களா?

---

## இன்னும் அதிகக் காயம்

வழிப்போக்கர்:—பையா! வண்டியில் அடிபட்டுக் காய மடைந்து விட்டாயே. உன்னைப் பக்கத்திலிருக்கிற ஆஸ்பத்திரிக்குக்கொண்டு போகட்டுமா?

சிறுவன்:—ஐயோ! வேண்டவே வேண்டாம். அங்கு என் அப்பாதான் டாக்டர். இந்தக் காயத்தைப்பற்றிக் கவலையேயில்லை. அங்குபோனல் ஏன் பள்ளிக்கூடம் போகவில்லை யென்று அப்பா முதுகுத்தோலையும் உரித்து விடுவார்.

—ரா. கி. தியாகராஜன்.

குரங்கு நம்மைப் பார்த்துக் கேலி செய்வதைப் பார்த்திருக்கிறோம். 'அண்ணு' என்று அழையாதது ஒன்றுதான் பாக்கி. ஆனல் அப்படி அழைக்கவும் உரிமை இல்லாமல் போய் விடவில்லை. ஏனென்றல் எத்தனையோ ஆயிர வருஷங்களுக்கு முன் வாழ்ந்த நம் தாத்தாவும் குரங்கையாவின் தாத்தாவும் ஒரு வயிற்றுப் பிள்ளைகள்!

# பரிணமம் ★

எஸ். தீத்தாரப்பன்



மனிதன் தற்போது இருக்கும் நிலையை எப்படி அடைந்தான் என்ற கேள்வியை, மேல்நாட்டில் பலர் பலவிதமாய்ப் பல வருஷங்களாக விவாதித்து வருகிருர்கள். ஒருவர் சொல்லிற காரணங்களும் காரியங்களும் அவருக்குத்தான் உண்மைபோல் புலப்படுகின்றன. அடுத்தவர் அவற்றைச் சுத்த முட்டாள்தனம் என்று சொல்லிவிட்டுத் தம்முடைய ஆராய்ச்சியை விளக்குகிருர். இவர் ஆராய்ச்சியும் இவருக்குத்தான் தெளிவாகத் தெரிகிறது. இப்படி நடக்கின்ற ஆராய்ச்சிகளில் அதிக விவாதத்தைக் கிளப்பும் கேள்வி இதுதான். மனிதன் உயர்ந்த நிலையிலிருந்து பாவஞ் செய்து இந்நிலையை (தற்கால நிலையை) அடைந்திருக்கிருன் என்பது. இந்த விவாதத்தை ஆராயப் போகுமுன் அண்டங்களை ஆட்டி வைக்கும் ஆண்டவன் ஒருவன் இருக்கிருன் என்பதை ஒப்புக் கொள்ளவேண்டும். அத்தகைய ஆண்டவன் இருக்கிருஞ இல்லையா என்ற கேள்வி இப்பொழுது வேண்டாம். உலக நாகரீகம் வளர வளர, காரணத்வற்றைக் காணக் காண அக் கேள்வி பலத்துக்கொண்டு வருகிறது. அதை விட்டு விடுவோம்.

நாம் உயர்ந்த நிலையிலிருந்தோம். கீழான நிலையை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறோம் என்பதே கொள்கை. நமக்கு ஆண்டவனைப்பற்றி நாம் உயர்ந்த நிலையி லிருந்திருக்கும்போது நன்கு தெரிந்திருக்கும். நாமும் அவனும் ஒருவரை ஒருவர் நன்கு அறிந்திருபபோம். அப்போது நாம் எப்படிப் பாவும் செய்து கீழான நிலையை அடைவோம் அல்லது அடைய முயல்வோம்? மேலும், அவன் நம்மைக் கீழான நிலைக்குக் கொண்டுவர விரும்புவாஞ? நாமும் முயலமாட்டோம்; அவனும் விரும்பமாட்டான்.

வாழ்க்கையின் மாயை யானது வெகு காலமாக மனிதனுக்கு ஒரு மர்மமா யிருந்தது. அதைத் தீர்க்கப் பலர் மிகப் பெரும் பிரயத்தனம் செய்து பல வழிகளைக் கண்டுபிடித்தனர். அவ் வழிகளே மதங்களாகவும் அவர்களே அம் மதங்களின் கர்த்தாக்களாகவும் எடுத்துக் கொள்ளப்பட்டனர். இவ் வழியாகவே மதங்கள் உண்டாயின. மனிதன் பிறப்பதற்கு முன் எவ்வாறிருந்தான்? இறப்பிற்குப் பின் எவ்வாறிருப்பான்? என்று திட்டமாக ஒருவரும் கூற முடியாது. அநேக மதக் கர்த்தாக்கள் பல படியாகச் சொல்கிருர்கள். ஆனல் அவற்றை நம்ப ஒரு ஆதாரமுமில்லை. ஆகவே மனிதன் உயர்ந்த பதவியிலிருந்து இந்நிலையை அடையவில்லை என்பது தெளிவாகிறது.

டார்வின் என்பவருடைய சித்தாந்தத்தின்படி மந்தியிலிருந்து மனிதன் உண்டாயிருக்கிறான். ஆனால், மந்தி எதனிடமிருந்து உண்டாயிற்று? அது எதிலிருந்து வந்தது? இப்படியாகக் கேட்டுக்கொண்டே போனால், கடைசியில் சூன்யத்தில் வந்து நிற்கிறோம். ஆகையால் சூன்யத்திலிருந்து முதன்முதலில் ஏதோ ஒன்று உண்டாயிற்று. எப்படி ஐயா, அது உண்டாகும் என்று நீங்கள் ஆச்சர்யப்படலாம்! காலச் சக்கரம் சுழலும்போது எது தான் உண்டாகாது என்று கேட்கிறேன். ஓர் உதாரணம் கூறுகிறேன். ஒரு எலுமிச்சம்பழத்தை எடுத்து இரண்டாக நறுக்குங்கள். பின்னர் இரு துண்டுகளையும் ஒட்டிக் கொஞ்சநாள் வைத்திருங்கள். ஏழெட்டு நாட்களுக்குப் பின்னர் எடுத்தால் அவற்றில் புழுக்கள் நாட்டிய மாடுவதைப் பார்க்கலாம். அங்கு புழுக்கள் எப்படி வந்தன என்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள். இப்படியாகவே ஒரு காலத்தில் வெறுமையிலிருந்து வெப்பு உண்டாகி அதன் காரணமாய் உயிருள்ள ஜந்து உண்டாயிற்று; காலச் சக்கரம் சுழலச் சுழல அந்த ஜந்து பிராணியாகி மிருகமாயிற்று.

இனி, மிருகமாகிய மந்தியை எடுத்துக்கொள்வோம். மந்தியிலிருந்து எப்படி மனிதன் வந்தான் என்பதை நிரூபித்துக் காட்டுகிறேன். ஆனால் ஒன்று—நீங்கள் என்னை நம்பவேண்டும். க்ஷேத்திர கணிதத்தில் ஒரு கொள்கையை நிரூபிக்க "ரிடக்ஷியோ அட் அப்சர்டம்" என்பதைக் கையாளுவார்கள். உதாரணமாக ஒன்று சொல்கிறேன். தற்காலத்தில் ஆண்கள் பெண்களுக்கு அடிமைகள் என்று நிரூபிக்கவேண்டும் என்று எடுத்துக் கொள்வோம். இப்பொழுது ஆண்கள் அடிமைகளாயிருந்தால் எவ்வாறிருப்பார்கள்? பெண்கள் கையில் இரும்புப் பெட்டித் திறவுகோலிருக்கும். பெண்கள்தாம் உலாவச் செல்வார்கள். (அல்லது அடுத்த தெருவில் வசிக்கும் சிநேகிதையிடம் பேசப் போவார்கள்.) அச்சமயத்தில் ஆண்கள் வீட்டைக் காத்துக்கொண்டிருக்க வேண்டும். இப்படியாக இருப்பார்கள். தற்காலத்தில் பெண்கள் இவற்றிற்கு ஒரு அணுகூடப் பிசகாது இவ்விதமாக ஆட்சி புரிகிறார்கள். ஆகையால் ஆண்கள் தங்கள் உரிமைகளை இழந்து பெண்களுக்கு அடிமையா யிருக்கிறார்கள். இவ்விதமாய் நிரூபிப்பது தான் "ரிடக்ஷியோ அட் அப்சர்டம்" ஆகும்.

இப்பொழுது நாம் மனிதர்களிடம் மந்தியின் குணங்களைக் காண்கிறோம். மந்தியின் அவதார விசேஷங்களைக் கண்டுவிட்டால் தாங்க முடியாது சிரிக்கிறோம். மேனி அழகிலும், விண்டுரைக்கும் வார்த்தையிலும் கோபுரங்கள் ஏறுவதிலும், வேகமுறப் பாய்வதிலும், (தலைப்பாகையில்) வால் வைத்துக் கொள்வதிலும், கூனி யிருக்கும் கோலநேர்த்தி தன்னிலும் அநேகர் மந்திக்கு நிகராயிருக்கின்றனர். ஆகையால் மனிதன் மந்தியி லிருந்துதான் வந்திருக்கிறானென்ற முடிவுக்கு வருகிறோம். நம் நிலை வருங்காலத்தில் எவ்வாறு மாறுமோ நாமறியோம். அந்நிலையைச் சிலர் தங்கள் கற்பனைக் கண்ணால் பார்த்து விவரிக்கிறார்கள். அதைக் கேட்கும்போது நாம் நம்மைப் பார்த்தே சிரிக்கிறோம்.

"பொய் வஞ்சகம் இவைகள் இவளுடைய குணமானால் கடவுள் இவளுக்கும் குறை வைத்திருக்க மாட்டார்."

# செல்லாத ரூபாய்

கி. முத்துசாமி.



'யம்மா—' இந்த ஏக்கம் நிறைந்த தொனி அச் சிறுமியின் அடி வயிற்றிலிருந்து ஈனஸ்வரத்துடனே கிளம்பிற்று. அவளுடைய கண்கள் நாலா புறமும் சுழன்று வட்டமிட்டுப் பார்த்தன. அந்தப் பார்வையில் சக்தி குறைந்து பரிதாபம் நிரம்பியிருந்தது.

'செல்லி'யின் கண்களிலிருந்து நீர் வழிந்துகொண்டேயிருந்தது. செல்லி அச் சிறுமியின் வயது சென்றதாய். இந்த உலகில் செல்லிக்குள்ள செல்வமெல்லாம் அந்த எட்டு வய்துச் சிறுமி தான்.

"யம்மா—தலையை வலிக்குது...உடம்பெல்லாம் நோவுது..."—சிறுமி கையைச் சற்றுத் தூக்கினாள். பல ஹீனத்தினால் அது துவண்டு விழுந்தது.

'தைலி, என் கண்ணல்ல,—அலட்டிக்காதம்மா! கொஞ்சம் சுடுதண்ணி குடிக்கிறியா?"—கிழவி தகரக் குவளை யிலிருந்த வெந்நீரைத் தைலியின் வாயருகே கொண்டு போனாள். அவள் வேண்டாமென்று தலையாட்டவே மறுபடியும் கீழே வைத்தாள். அவள் கண்களி லிருந்த ஜலம் ஒரு பொட்டு அதில் நழுவியது.

"கடவுளே! மாரியம்மா! என் கொளந்தையோட பரிதாபம் ஒனக்குத் தெரியிலியா? நான் யாருக்குத் தீங்கு நெனச்சேன்? இந்தப்பாவி அதிருஷ்டம், செல்லாத ரூபாயைக் குடுத்து ஏமாத்திட்டானே...........பொங்கலுக்குன்னு அந்தப் புண்ணியவான் அனுப்பிச்சத்தைக் கூட ஒட்டாமெ செய்துட்டியே கடவுளே..."—கிழவி தேம்பித் தேம்பி அழுதாள். வறுமையின் தாண்டவம் அவளை வாட்டிற்று. அவளது கரங்கள் தாமாகவே தைலியின் வரண்ட தலையைக் கோத ஆரம்பித்தன.

பாவம்! ராஜலிங்க முதலியார் ஊரைவிட்டு மாற்றலாகிப் போன பின்னர்தான் செல்லியின் கஷ்டங்கள் அதிகமாயின.

செல்லி முதலியாரின் வீட்டில் வேலை செய்து பிழைத்துக் கொண்டிருந்தாள். தாரா்ள சிந்தனையுடைய முதலியார் குடும்பம் செல்லியை மிக அன்புடன் பராமரித்து வந்தது. முதலியாரின் குடும்பத்தைப் போன்ற தயையுள்ள குடும்பங்களே அந்த ஊரில் இல்லை. பொறாமை, பொய் நிறைந்த அந்த ஊருக்குள்ளே அவரது குடும்பம் தான் நடு நாயகமாக விருந்தது. அவர்கள் போனதும் செல்லியின் பிழைப்பும் போய்விட்டது.

செல்லி கலியுகத்துக்குப் புறம்பானகிழவி. பொய், வஞ்சகம்-இவைகள் இவளுடைய குணமானால் இவளுக்கும் கடவுள் குறை வைத்திருக்க மாட்டார். அவளது நிறை உள்ளத்தில் இவைகளுக்கு இடமேயில்லை. அவள் ரொம்ப மானி; யாசித் தறியாள். அவ்வப்பொழுது கிடைக்கும் அக்கிரகாரத்துச் சில்லரை வேலைகளே தமக்குப் போதும் என்று கருதி இருந்தாள்.

முதலியாரிடமிருந்து எப்பொழுதாவது அவளுக்குப் பணம வரும். அவளது உள்ளம், 'உலகமே ஒரு கருணை ஸ்வரூபம்' என நம்பியது. ஆனால்......இன்று அவள் மனத்தில் கொந்தளித்து நிற்கும் பெரும்புயலை அவளால் அடக்க முடியவில்லை!

2

கரிமேகஞ் செட்டியாரின் கடையில் கும்பல் அதிகமாக இருந்தது. செட்டியார் வேலைக்காரனைக் கெடுபிடி செய்து கொண்டிருந்தார். அவருக்குச் சமீபமாகத் தபால்காரப் பழனியாண்டியும் நின்று கொண்டிருந்தான். அவன் 'போதை'யில் இருக்கிறான் என்பதை அவன் தோற்றமே எடுத்துக் காட்டிற்று. செட்டியார் அவனைப் பாரர்ததுபோர் லிருந்தார்.

"என்ன செட்டியாரே! என்னை,இன்னும் காக்க வைக்கிறீங்களே?—"

"ஏன்—ஏதுக்கு நிக்கிரே?"

"அடே ய்ப்பா! செட்டியாரா! ஹ்ம்! வெத்திலைப்பாக்கு வேணும்னு நாளிநாளியா நிக்கிறேன்......"

"ஏய்! இங்கே பாரு—வெத்திலைபாக்குன்னாலும் தாரேன்... போயலை மாத்திரம் கேக்காதே!......"

"என்னுங்க செட்டியாரே! அதுலியும் இத்தினியூண்டு குடுத்தா என்ன, கொறஞ்சா பூடும்?......ஒரு நாளக்கித் தண்ணிக்கி இந்தாடாண்ணு ரெண்டணாக்குடுக் காட்டாலும், இது கூடவா குடுக்கக்கூடாது?"

"சரி, இந்த எடத்தை விட்டு மொதல்ல நவறு—இந்தா."

பழனி அதை வாங்கிக்கொண்டு தள்ளாடிக்கொண்டே நகர்ந்தான். அவன் சற்றுதூரம் சென்றதும் செட்டியார் மறுபடியும் கையைத்தட்டி "பழனி, பழனி, இங்கே வா!" என்றார்.

"என்னுங்க செட்டியாரே! நாளியாயிடுச்சி—சும்மா சும்மாக் கூப்பிடுறீங்களே!"

"அடேடே, காரியம் ஆனதும் பிகுபண்ணிக்கிறியா?"

புகையிலையைக் கடைவாய்க்குள் திணித்துக்கொண்டே பழனி வந்தான்.

"ஒன்னாலே ஒரு காரியம் ஆவணுமே! என்ன ஒருமாதிரியாப் பாக்கிறே? ஒரு முழுப் புட்டிக்கி வீசிப்புடறேன்......" செட்டியார் பெட்டியைத் திறந்து அதிலிருந்த ரூபாயை எடுத்தார்.

"பழனி, இதைப் பாரு, இது ரொம்பநாளா என் பொட்டியிலியே தூங்குது—இதை நீ செல்லவெச்சுக் குடுத்துடு—நான் சொன்னபடி செய்துடறேன்."

பழனி ரூபாயைக்கையில் வாங்கித் திருப்பித் திருப்பிப் பார்த்தான். அது மிகப் பழைய ரூபாய். பின்னர் அதைப் பைக்குள் போட்டுக்கொண்டு தலையைச் சொறிந்துகொண்டே சென்றான்.

இந்த நாடகத்தின் பலன்தான் செல்லியின் தலையில் விடிந்தது.

3

"செட்டியாரே, கும்பிடறேனுங்க—இந்தத் தட்வை மாத்திரம் தயவு பண்ணுங்க—"

"கிளவி, ஒரு தட்வை சொன்னாத் தெரியலே? போய் வேறெ பணம் கொண்டா. அல்லாட்டி இங்கே சாமான் கெடயாது—"

"எசமான், எம்மவ மூணுநாளாப் பட்டினியாக் கெடக்குதுங்க...அதோட காச்சல் வேறே...இதை எடுத்துக்கிட்டு எதனாச்சும் கொஞ்சம் கொறச்சுக்கிட்டுன்னாலும் குடுங்க. ஒங்களுக்குப் புண்ணியம் உண்டு"—அவளால் பேச முடியவில்லை.

"கிளவி, ஒரு தரம்தான் சொல்லுவேன்; சும்மா சும்மா நச்சரிச்சுக்கிட்டு இங்கே நிக்காதே!" செட்டியாரின் கண்டிப்பு ரொம்பப் பலமாக இருந்தது.

"சாமி, அப்பிடிச் சொல்லாதிங்க......"அவளது கண்கள் நீரைச் சொரிந்தன. அதை முந்தானையால் துடைத்துக் கொண்டாள்.

"நீ போவமாட்டியா?" அவரது முகத்தில் கோபம் கொந்தளித்தது. அதைத் தொடர்ந்து, "ஒன்னாலே எங்கணக்குப் பெசகிப் போவுது" என்றார். கணக்கில் லயித்திருப்பதுபோல் பாவம் கொண்டிருந்தது அவரது முகம்.

பாவம்! அவள் நின்று நின்று பார்த்தாள். செட்டியார் திரும்புகிற வழியாயில்லை. தள்ளாடிக்கொண்டே கூடையை எடுத்துக்கொண்டு கிளம்பினாள்.

அந்த ஊரில் வேறு கடையுமில்லை. வேண்டுமானால் மூன்று மைல்கள் செல்லவேண்டும். அவளால் முடியுமா? குடிசையில் உள்ள ஜீவன்—?

முந்தாநாள் குடித்த சிறிது கூழ் இன்னும் அவள் வயிற்றிலேயே உறங்கிக் கொண்டிருக்குமா?

அவளது பரிதாபநிலை தபால்காரப் பழனியாண்டியைக் கூட இளகச் செய்யவில்லை. அவள் எவ்வளவோ சொல்லி முறையிட்டதெல்லாம் வீண்தான். அவள் அவனிடம் முறையிட்டபோதெல்லாம் ஏதோ ஒரு கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது அவன் உள்ளம். அவன் கடைசியாகச் சொன்னது இது தான்: "கிளவி, இதை நிச்சியமா நான் ஒங்கிட்டக் குடுக்கல்லே... நீ தான் எங்கிட்டோ இருந்து கொண்டாத்துட்டே! வேனும்னு வெச்சுக்க், அல்லாட்டி அந்த வாய்க்கால்லே போடு!"

செட்டியாராவது எப்பொழுதாவது பயன் படலாம். அவள் வரட்டு ஏழைதானே!

## 4

செல்லியின் குடிசை தெருவுக் கெல்லாம் கடைசியாக ஒரு ஓதுக்குப் புறமாக இருந்தது. அக்குடிசையின் வெளித் தோற்றம் மிகப் பரிதாபமாக இருந்தது. மேல்காற்று வீசி எங்கும் ஆரவாரம் செய்து கொண்டிருந்தது. சவுக்கை மரங்களின் 'ஹோ' வென்ற சப்தம் கடல் அலைகளபோல் ஆர்ப்பரித்தது. வெகு தூரத்திற்கப்பால் எங்கோ மழைபெய்வதை இடிகள் சற்று நேரத்திற்கொரு தடவை தெரிவித்தன.

குடிசைக்குள்ளிருந்த சிறிய அகல் விளக்கு 'எப்பொழுது அணையலாம்' என்று யோசித்துக் கொண்டிருப்பது போலிருந்தது. செல்லி அதைத் தூண்டி விட்டுக் கொண்டே யிருந்தாள். அவளது மனப் போராட்டத்தினிடையே ஒரு எண்ணம் உதித்தது.

"பண்ணையாருடைய கொல்லையில் சென்று இரண்டு சோளக்கதிர் கொண்டு வந்தாலென்ன? இப்பொழுது அங்கு யாரிருக்கப் போகிறார்கள் ?—"

செல்லி மகளை உற்றுப் பார்த்தாள். பாசம் அவளை முன்னுக்குத் தள்ளியது. கதவைத் திறந்தாள். 'குப்' பென்ற குளிர்ந்த காற்று கதவைத் தள்ளிற்று. அந்தப் புது எண்ணத்தையும் காற்று அடித்துக் கொண்டுபோய் விட்டது போலும்!

"சை! இது என்ன எண்ணம்? வேண்டாம்—கடவுளே! இவ்வளவு வருஷங்களாக என் மனதைக் காப்பாற்றி விட்டாய். இன்னும் சிலகாலம் தான். என் தைலியைக் காப்பாற்று!" அவளது கண்ணீர் ஆறாகப் பெருகிற்று. அவள் உள்ளே நுழைந்து மகளின் கரத்தைப் பற்றினாள்.

"தைலி! தைலி!"—சப்தமே இல்லை. அந்தச் சில்லிட்ட கை செல்லியின் கைகளிலிருந்து நழுவியது.

சற்று நேரத்திற் கெல்லாம் காற்றின் சப்தம் அடங்கியது. சாந்தமாகச் சிறு சிறு தூற்றல் போட வாரம்பித்தது.

குடிசைக்குள் பெரும்புயல்—இதை வெளியுலகம் அறியுமா?

## 5

"இளவி, இள்ஷி! ஐயோர் பாவம்! ஒம் மவ செத்துப் பூடிச்சா? ஐயையோர்! அது கெடக்குது—இந்தா, மணியார்ட்ர் கடுதாசிலே ரேகை வையி. நாலு மாசத்துக்கு முன்னாலே கோவில் கட்டறத்துக்காவ இரண்டணாக் கொடுத்தீல்ல? ஒம் மவ பேருக்கு அம்பது ரூவா உழுந்திருக்கு—" இது பழனியாண்டியின் குரல். இப்போது அவன் போதையில் இல்லை.

"ஆ! அம்பது ரூவாயா? வாணும் போ! என் முன்னாடி நிக்காதே! எனக்கு வாணும்! அதைக் கொண்டு வாய்க்கால்லே போடு போ! இங்க நிக்காதே! ஈரக்கமத்த ஒலகத்துலே நீ இருக்கணும்; ஒன் பணம் இருக்கணும். எனக்கு வேண்டியதில்லே!"—இப்படிச் சொல்லி விட்டுக் குடிசைக்குள் நுழைந்து கதவைத் தாளிட்டுக் கொண்டாள் செல்லி.

பழனி இரண்டு மூன்று முறை கூப்பிட்டுப் பார்த்தான். அது அவள் காதில் விழவே யில்லை.

"கடவுளே! இந்த ஒலகத்துலே நீ படைச்ச உசிருக்கு மதிப்பில்லே—மனுசாள் படைச்ச காசுக்குத்தான் மதிப்பு!—"

இது அவன் காதுகளில் எங்கே விழுந்திருக்கப் போகிறது!

பிரபந்த வகைகளில் உலா ஒரு நல்ல இலக்கியம். படித்தின் புறுவதற்கு வேண்டிய சொல் நயமும், கவிஞரின் சொல் சாதுரியமும், அழகான வர்ணனைகளும் நிறையப் பொதிந்து கிடக்கும் உலாக்கள் அநேகம் இருக்கின்றன. அதில் ஒன்று,

# மதுரைச் சொக்கநாதர் உலா

மு. த. வேலாயுதம்



பேரறிவு படைத்த நம் பெரியோர் பிரபந்தங்களைத் தொண்ணூற்றாறாகப் பிரித்திருக்கின்றனர். அவைகளுள் உலா என்பது ஒன்றாம். உலா வென்பது என்ன என்பதை ஆராய்வாம்: இலக்கண விளக்க ஆசிரியர் உலாவின் இலக்கணத்தைக் கூறவந்த விடத்து,

"குழை மகனைக் கலி வெண்பாக் கொண்டு
விழை தொல் குடிமுதல் விளங்கவுரைத் தாங்
கிழைபுனை நல்லா ரிவர்மணி மறுகின்
மற்றவன் பவனி வரவேழ் பருவ
முற்றமா ளூர்தொழப் போந்த துலாவாம்."

எனக்கூறுகிறார். இதற்கு உரையாசிரியர் கூறுவதாவது. "இளமைப் பருவமுற்ற தலைவனைக் குலத்தானுங் குடிப்பிறப்பானும் மங்கலங்களானும் பரம்பரையானும் இன்னானென்பது தோன்றக் கூறி, அணிகலன்களான் அலங்கரித்துக் கொண்டு முதன்மை யெய்திய மானார் நெருங்கிய அழகிய வீதியிடத்து அன்னோன் பவனிவரப் பேதை முதலிய ஏழ்பருவமாதர் (பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அறிவை, தெரிவை, பேரிளம் பெண்) கண்டு தொழ உலா வந்தது உலாவாம்." மேற் கூறப்பட்ட ஏழு மாதர்களும் விலைமாதர்களாவர்.

இங்கு ஆராய்வதற்கு வேண்டி எடுத்துக் கொண்ட மதுரைச் சொக்கநாதருலா வென்பது, மதுரையிற் கோயில்கொண்டெழுந்தருளிய சொக்கநாதக் கடவுள் விஷயமாக யாக்கப்பட்டது. மதுரையில் சுமார் 400 வருடங்களுக்கு முன்பு அரசு புரிந்து வந்த வீரமாறன் என்னும் அரசன் விருப்பத்திற் கிணங்க, புராணத் திருமலைநாதரென்னும் புலவர் சிகாமணியால் இயற்றப் பெற்றது.

இந்நூல் கலி வெண்பாவால் யாக்கப் பட்டது. மொத்தம் கண்ணிகள் 516. உவமைகள், உருவகங்கள், சிலேடைகள், நீதிகள் முதலியன அணிகலனாக் விளங்குகின்றன. படிப்போர்க்கு மிகச் சுவை பயக்கும் நூல் என்பதில் ஐயமில்லை.

உவமை.

சொக்கநாதர் வீதியுலா வருகின்றார். அப்போது அவர்தம் ஆடையாபரணங்களைப் பற்றிக் கூறுமிடத்து,

"திகழ்வாள் வயிரமணி சேருதர பந்தம்
அகல்வான் கதிரை மதியாக்கப்—புகலளிகள்
சாலத்திரண்டு சூழ் தாமரைபோற் செங்கைமேல்
நீலக்கடக வொளி நின்றிலங்கக்—கோலமணிச்
சுந்தரமார் திண்புயமேற் சோதிமணிக் கேயூரம்
மந்தரஞ் சூழ் வாசுகியின் வாய்ப்புதவ ..."

என அழகு படுத்தி யிருக்கின்றார் புலவர்.

சொக்கநாதருக்கு உதர பந்தம் என்னும் ஓர் அணியை வயிற்றின்மேல் அணிவித்திருக்கின்றனர். அதில் பதித்திருக்கும் கற்கள் பிரகாசம் பொருந்திய இரத்தினக் கற்களாகும். சூரியனைச் சந்திரனுக்குதல் போல மிக்க பிரகாசம் பொருந்திய உதரத்தில், மதியின் ஒளி யன்ன மாணிக்கக் கற்களாலான அணியை அணிவித்திருக்கின்றனர். கைக்குத் தாமரையை உவமை கூறுவது மரபு. தாமரை மலரில் வண்டுகள் சூழ்ந்திருத்தல் இயற்கை. இவ்வாறே சொக்கநாதரின் கைத்தாமரையில், நீலக் கடகத்தை அணிவித் திருக்கின்றனர். இந்நீலக் கடகம் வண்டுகள்போல் காணப்படுகின்றன. எனவே தாமரை மலரில் வண்டுகள் சேர்தல் இயற்கை யன்றோ? இதையே நீலக் கடகமணிந்த கைக்கு உவமையாகக் கூறுகிறார் புலவர் பெருமான்.

மற்றோரிடத்தில், பெதும்பைப் பருவத்தாள் ஒருத்தி வீதியுலாவைக் காண்கிறாள். அவள் நெகிழ்ந்த தன்மையை எடுத்துக் கூறப்படுகிறது.

இளமை யுடையவள்; தாமரை அரும்புகள்போல் அவள் ஸ்தனங்கள் (நகில்கள்) காணப்படுகின்றன. வடவாக்கினி எத்தகைய கொடுமையுடையது? எத்தனை உலகத்தை அழிக்க வல்லது? அந்த வடவாக்கினியே அழகுடன் இரண்டு நகில்களாகத் தோன்றின அவள் மார்பகத்தின் கண். இவைகள் ஐம் பொறிகளையும் தம் வயப்படுத்தி அரிய தவஞ்செய்யும் தவயோகிகளின் கைகளை முகிழ்த்துத் தவத்தைக் கெடுக்கவல்லன. கொடிய காலனும் கண்ணைத் திறந்து ஆநந்திக்கச் செய்யுந் தகுதியுடையன. காமுதல் மெய்யெலாம் புளகாங்கிதம் கொள்ளும் விதம் செய்யும் ஆற்றலுடையன. ஈதன்றி அவள் இடையோ மிகச் சிறியது, தவம் செய்யும் யோகிகளின் தீவினைகளெல்லாம் எவ்வாறு காலத்தான், யோகத்தின் பலனால் அருகி வருகின்றனவோ அது போலவே இவள் இடையும் சுருக்க முடையது. புனிதமான திருப்பாற் கடலில் எவ்வாறு ஆலகால விஷம் தோன்றிற்றோ அவ்வாறே இவள் கண்ணிடத்துக் களவு என்னும் விஷம் தோன்றிற்று. அன்றலர்ந்த மலரை முடித்தவள். காமனின் வலையில் அகப்படா திருந்தவர்கள் இனித் தப்ப மாட்டார்கள். காமனுக்கே ஜெயத்தைக் கொடுப்பவள். கொடிய இருள்போன்ற குழலை வாரி முடித்துக்கொண் டிருக்கும் பாவை. அத்துடன் அவள் தன் இளநகை பெருமையுற்றது. அவள் இளம் பற்களின் ஒளி முன்னர் முல்லையரும்பு எதிர் நிற்குமா?

மயிலிறகின் அடிக் குருத்துக்குத்தான் அத்தகைய ஒளியுண்டா? என்று கண்டோர் கருதும் பேரொளி வாய்ந்த பற்களையுடையாள். காரிருள் சூழ்ந்த வானத்தின்கண் உள்ள மின்னலைக் கண்டிருக்கிறோம். அம் மின்னல் அழகிய பாதங்கள், கைகள் இன்னும் மற்றேனைய உறுப்புக்கள் கொண்டு, வடிவம் எய்தி, மேன்மேல் வளரப் பெற்றால் எத்தகைய பொலிவுடைத்தோ, அவ் வண்ணமே இவள் பொலிந்து விளங்குகிறாள் எனப் புலவர்,

"முற்றாத வல்லி முளரி முகிழிரண்டு
பெற்றாலென வழியாப் பேருலகம்-செற்றழிக்க
வேண்டிப் பிறக்குமெழில் வெள்ளத்துடன் வடவை
மூண்டிங் கிரண்டாய் முகிழ்த்ததென—மாண்டவத்தோர்
கைமுகிழ்க்க வெங்காலன் கண் முகிழ்க்கக் காமுகர்தம்
மெய் முகிழ்க்க மேன் முகிழ்க்கு மென்னகிலாள்-தண்மை
விளைக்குந் தவமடைந்தோர் வெவ்வினை போலும்
இளைக்க வடிக்கொண்ட விடையாள்—விளைந்த
அளவிலரும் பாலாழி யாலால மென்னக்
களவு பிறந்துடைய கண்ணாள்—அளிகள்
கடியாத தார் முடிக்கக் காமன் றனக்கு
முடியாத வெல்லா முடிக்கப்-படி முழுதும்
கூடி முடிக்குங் கொடிய விருள் போல முடிக்
கூடி முடிக்குங் குழலினாள்—நீடிவளர்
முல்லை யரும்புக்கும் முருந்துக்கும் பேரொளிகள்
இல்லையென வீறு மிளநகையாள்—தொல்லுலகில்
மின்னுக்கொரு வடிவ மேன்மேல் வளர்ந்தேறல்
என்னப் பொலிந்து வளர் மெய்தினாள்."

என்று அழகாகக் கூறியிருக்கிறார். நகில், இடை, கண, குழல், இளநகை, பொலிவு ஆகிய இவைகட்கு எடுத்துக் கூறும் உவமைகள் சிந்தித் தின்புறத் தக்கன.

உருவகம்

இந்நூலில் உருவகங்கள் ஆங்காங்கே சிறப்பளிக் கின்றன. உருவகம் என்பது யாதெனின், உவமானப் பொருளையும் உவமேயப் பொருளையும் வேறுபாடொழிவித்து ஒன்றே யென்பதோர் உணர்வு தோன்ற ஒற்றுமை கொடுத்தலாம்.

மங்கைப் பருவ மெய்தினாள் ஒருத்தியின் மனப் பான்மையை எடுத்துக் கூறுமிடத்து,

"—திங்கண் மதி
சூழுஞ் சடையான் றுணைத்திண் புயாசலமேல்
வாழுங் கருத்தே வளர் தோகை"

எனக் காணப் படுகிறது. திங்கட்பிறையைச் சூடிய சடாபாரத்தை யுடைய சிவ பெருமானின் இரண்டு வன்மை பொருந்திய தோள்க

ளாகிய மலையின்மேல் வாழுங் கருத்தையுடைய வளர் மயில் எனப் படுகிறது. மயில் குறிஞ்சி நிலத்துக்குரிய கருப்பொருள். அந் நிலத்தில் மலையின்கண் வாழும் கருத்தையுடைய மயில் முற்கூறிய மங்கைப் பருவத்தாளாகிய பெண். எனவே சிறந்த இடத்தில் உருவகப் படுத்திக் காட்டும் வன்மை நோக்கி இன்புறத் தக்க தாம்.

அமுதம் எங்கே பிறந்தது எனின் திருப்பாற் கடலில் என் பார் பெரியோர். இவ்வாறு உண்டான அமுதம் யாருக்குப் பயன் பட்டதென்றால், தேவர்களுக்கே யென்பது தெளிவு. மற்றை யோர்க்கில்லை. உலகிலுள்ள மற்றவர்களும் அத்தகைய மேம் பாட்டினையுடைய அமுதத்தை அடைய எண்ணுவதியற்கையே. அதனால் உலகோர்க்குப் பூமியானது அரிவைப் பருவத்தாளாய் அவ் வணங்கை அமுதமாக அளிக்கிறது. அன்று திருப்பாற் கடலில் அமுதம் பிறந்தது. இன்று பூமியில் அமுதம் பிறந்தது. பாற்கடலில் தோன்றிய அமுதம் தேவர்கட்கே உரித்தானது. இன்று இவ் வமுதம் உலகோர்க்கு உரித்தாகிறது.

"—கடையும்

உவரிதரு மமிர்த மன்றி யுலகோர்க்
கவனியுதவு மமிர்தம்."

எனக்கூறப் படுவது சிந்தித்து இன்புறுதற் குரித்தாம்.

சிலேடை

இந் நூலில் சிலேடைகள் எங்கும் பொதிந்துள்ளன.

'ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி
தெரிவுதர வருவது சிலேடை'

எனக் கூறுகிறார் இலக்கண விளக்க ஆசிரியர். ஒருவகையான தொடர்ச் சொற்கள் பல பொருள்களைத் தருதல் சிலேடையலங்கா ரம் எனப்படும். மங்கைப் பருவத்தாள் தன்மையைக் கூறு மிடத்து,

'கரையழியா வாவி கலக்கி'

எனக் காணப் படுகிறது. ஆவி என்பதற்கு உயிர் என்றும், குளம் என்றும் பொருள் கொள்ளலாம். இங்கே ஆசிரியர் மங் கைப் பருவத்தாள் உயிரை வருத்த முறச் செய்கிறாள் என்றும் குளத்தைக் கலங்கச் செய்கிறாள், என்றும் இரண்டு பொருள் தரும் மாட்சிமை யுன்னுதற் குரியது. மற்றும், சொக்கநாதரின் வீரத்தைக் கூறு முகத்தான்,

'பாத்துரையா மித்திரரைப் பல்லுதிர்த்து மாமடலிற்
சாய்த்த விதியைத் தலைகெடுத்து'

எனக் காணப்படுகிறது. பகுத்தறிந்து கூறாத நண்பர்களைப் பல் லுதிர்த்தும் அழகிய பூவிதழ்களில் வெம்மையாக்கிக் கிடத்தப் படுமாறு செய்த ஊழ்வினையைப் போக்கியும் என்ற பொருளுடன் பகுத்துரையாத சூரியரைப் பல்லுதிர்த்து [illegible]ஸ்வதியுடன் வீற்

றிருக்கும் பிரமனின் தலையைக் கெடுத்தவர் என்ற பொருளுங் காண்க.

நீதிகள்

இந் நூலின் கண் பல நீதிகள் மிளிர்கின்றன. பேதைப் பருவத்தாளைப் பற்றிக் கூறுமிடத்துக் காண்பதாவது: பேதையின் கூந்தல் அங்குமிங்கும் அலைகிறது. அது எவ்விதமாகக் காட்சியளிக்கிறதென்றால், பொய்வாழ்வடைந்தோர் புலன்கள் போல் எனக் கூறுகிறார். பொய்வாழ்வடைந்தோர் எவ்வாறு காணப்படுவர்? அகத்தில் மகிழ்ச்சியுண்டா? முகத்தில் குளிர்ச்சியுண்டா? புலன்கள் ஒன்றோடொன்று தத்தம் நிலையிலிருந்து வேலை செய்கின்றனவா? இல்லை. கண் மருள்கிறது. காது எதையோ கேட்கிறது. மனம் பலவற்றையும் நினைந்து நினைந்து புண்படுகிறது. அமைதியே யில்லை. அதுபோல அப்பேதையின் கூந்தலும் அலைகின்றதென்கிறார்.

நிற்க. உலகத்தில் அறம், பொருள், இன்பம் என்பதை நன்குணர்ந்து நன்மையிது, தீமையிது என்று பகுத்தறிந்தபின் உலக நிலையாமையை அறியாதிருப்பரோ பெரியோர்? அங்ஙனம் உலக மயக்கத்தை நீத்த உத்தமர்கள் தம் மனம் எவ்வாறு மாசற்று அமைதியாகக் காணப்படுமோ அதுபோல் கலகம் ஒரு சிறிதும் உண்டாகாத கண்களை யுடையாள் எனக் கூறப்படுகிறது. இதையே,

'பொய் வாழ் வடைந்தோர் புலன்கள்போ லொன்றோடொன்
றெவ்வா தலைகின்ற வோதியாள்—பவ்வத்
துலக மயக்க மொழிந்தோர் மனம் போற்
கலகஞ் சிறிதறியாக் கண்ணாள்'

எனக் கூறுகிறார் கவிஞர்.

மடந்தைப் பருவத்தாளாய ஒரு பெண்ணின் கண்களின் தன்மைகளைக் காட்டவந்த புலவர் அரசியற் றுறையிலழகான நீதியை எடுத்துக் காட்டுகிறார்.

உலக மக்கள் மகிழ்வது நல்ல அரசாட்சியினாலே என்பது வெளிப்படை. கொடுங் கோலால் என்னாகும்? பெருந்துன்பமல்லவா? செங்கோலைச் சிதைத்து மக்கள் எல்லோர்க்கும் இன்னல் புரியும் கொடுங்கோல் நிலவுமாயின் இதைவிடத் தீமை படைக்கக் கூடியதொன்றுண்டோ? உண்டு என்கிறார் புலவர். அதுவே அம் மடந்தையின் கூர்விழி.

'செங்கோ லொழித் தெவர்க்குந் தீங்குபுரி வேந்தர்
வெங்கோ லினுங் கொடிய வேற் கண்ணாள்.'

எனக் கூறப்படுகிறது. இவள் கண் மயக்குந் தீமைபோல் கொடுங்கோலும் பயக்காது. எனவே, கொடுங்கோ லரசனால் குடிகளுக் கேற்படுந் தீங்குகளை எடுத்துக் காட்டுகிறார் இந் நூலாசிரியர் திருமலை நாதர்.

ஆதலால், மதுரைச் சொக்கநாதர் உலா படித்து இன்புறத் தக்க ஒரு சிறந்த நூலாம்.

# விஞ்ஞானமும் மந்திரமும்

டி. பி. நவநீதகிருஷ்ணன் எம். ஏ.,



யவன கிரேக்கர்கள், தம், சிந்தனை வழியே கண்டுபிடித்த அனுமான வியலான விதிகளைக் கொண்டு 'அறிந்த முடிவுகளை, இயற்கையில் நேரிடும் நிகழ்ச்சிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து, அம்முடிவுகள் சரியானவையா, அன்றிப் பிழையான வையா என்று சோதனை செய்யும் வகையைப் பின்பற்றுதவராயி னர்; தர்க்க முறையை யொட்டியே, தம் முடிவுகளை நிலைநாட்டி வந் தனர். இதனால், அவர்கள், மேலும்' மேலும் இயற்கையின் மறைகளைக் காண்டல் அரிதாயிற்று. நாளடைவில், மந்திரவிய லான கருத்துக்களையும், தம் விஞ்ஞானத்தில் புகுத்தலாயினர். இவ்வாறு பெளதுவியலான சிந்தனையுடன் மந்திரத்தையும் இணைத்தவர்களில் முதன்மையானவர், பைதாகாரஸ் என் றவர். அவரும் மற்ற கிரேக்கர்கள் சிலரும், தம் நாட்டின்மீது பாரசிகர் படையெடுத்து, முன்னேறியபோது, பகைவரிடமிருந்து தப்பி, இதாலிய நாட்டை அடைந்தனர். தம் நாட்டை வென்ற பாரசீகர்கள், பாபிலோனியரின் வாழ்க்கையின் பாற்பட்ட பண் பியலுடனிருந்தவர்கள். எனவே, பாபிலோனியரின் மந்திரவிய லான கருத்துக்களையும் கொண்டவர்கள். தம் நாட்டினின்று தப் பித்தோடிய கிரேக்கர்கள், தம் பகைவரின் வெற்றிக்குக் காரணம், அவர்கள் மந்திர சக்தியினின்று பெற்ற துணையே யென்றெண்ணி தாமும் மந்திரவியலானவற்றை உறுதியாய் நம்பலாயினர்.

பைதாகரஸும் அவரைச் சார்ந்தோரும், மந்திரத்தை நம பினரெனினும், விஞ்ஞானத்தை முற்றும் மந்திரமாக்கிவிடவில்லை. கணித நூலிலும் சிறிது முன்னேற்ற மடைந்தனர். வரிவடிவ கணிதத்தில் தர்க்க ரீதியாய், வரிவடிவ வியலான விதிகளை நிரூபிக் கும் வழிகளைக் கண்டு பிடித்தனர். இம் முறையைப் பின்பற் றியே, ஒழுங்காய் வரையறுக்கப்பட்ட வரிவடிவ நூலை, யூக்ளிட் என்பார் இரு நூற்றாண்டுகளுக்குப் பின்னர் நிலை நாட்டினார். பைதாகரீயர்களே எண்களை ஒற்றைப் படையானவை, இரட்டைப் படையானவை யென்ற முறையில், முதன் முதலாய் வகையீடு செய்தவர்கள். தொடர்ச்சியான எண்களைப் பலவகைகளில் அமைத்துக் கூட்டும் வழிகளைக் கண்டுபிடித்தனர். கணிதநூல் பாற்பட்ட, வீதப்பொருத்தங்கள் கணக்கிடல்—எண்களின் சராசரி களைக் கண்டுபிடித்தல்—இன்னோரன்னவையான யாவற்றையும் கண்டனர். இவ்வுலகம் உருண்டை வடிவமானதென்றும், அது வரை எண்ணப்பட்டவாறின்றி, அது இப்பிரபஞ்சத்தின் நடு மையமானதன்று எனவும் அவர்கள் நிலை நாட்டினர். இரு நுனி களும் இழுத்துக் கட்டப்பட்ட கம்பியை மீட்டுவதால், ஒலி எழுவ தையும், அவ்வாறு எழும் இசையின் சுரங்களுக்கும், கம்பிகளின் நீளங்களுக்கு மிடையுள்ள தொடர்பு எவ்வாறானது என்பதையும்,

அவர்கள் கண்டு பிடித்தனர். ஆனால், சோதனை வாயிலாய் கிடைத்த இவ் விளைவின் பாற்பட்ட அறிவை மந்திர வியலாக்கினர். பிரபஞ்சத்திலுள்ள அண்ட கோளங்கள் அவற்றின் மையத்திலுள்ள நெருப்புப் பிழம்பினின்று, வெவ்வேறு தூரங்களிலுள்ளன வென்றும், அவ்வாறான தூரங்களில் அவை சுழன்றுவரும் போது, இசை யெழுகின்றதெனவும், அவ்விசையின் சுரங்கள் தூரத்திற் கேற்றவாறு வேறுபடுகின்றன வெனவும், எல்லாச் சுரங்களும் எழுப்பப் படுவதால், சீரான இன்னிசை விசுவமெங்கும் பரவுகின்றதெனவும் அவ்வின்னிசையைச் சாதாரண மானிடர் கேட்க இயலாதென்றும், மாந்திரீக சக்தி வாய்த்த சிலர், அதைக் கேட்க இயலுமென்றும் இவர்கள் கூறினர். எண்ணும் வரிவடிவமும், அளவுகளைக் குறிப்பிடும் அடையாளங்களே யென்பதை மறந்து, அவை உண்மையில் தம்மியலாகவே உள்ளவையெனக் கொள்ளலாயினர். எண்ணால் குறிப்பிட இயலாத யாவும், இல்லாதனவே யெனவும் எண்ணலாயினர். எண்ணிலும், முழு எண், பின்ன எண் என்பவை மட்டுமே உண்மையானவை யெனவும் கூறினர். 2, 3, என்ற எண்களின் கீழ் மடக்கைகள் திட்டமான எண்களன்று. இவ்வாறு திட்டமாய்க் கணக்கிட முடியாதவை இருத்தலே தகாது என்றெண்ணி, அவர்கள், கீழ்மடக்கை எண்களைப்பற்றித் தாம் கண்டுபிடித்தவற்றை, வெளியிடாது இருந்துவிட்டனர் கணித நூலில் முக்கியமான பகுதி யொன்று கண்டு பிடிக்கப்பட்ட பினனரும், வெளியிடப்படாது தடைப்பட்டது. வினை செய்யாது, சிந்தனையால் மட்டுமே எதையும் செய்ய முற்பட்டு, அவர்கள், கணிதநூலை மக்கள் வாழ்க்கையில் பயன்படாதவாறு தடுத்தனர். வாழ்க்கையில் பயனபடாது, சிந்தனையால் மட்டும் ஊட்டப்பட்டதே மேன்மையான நூல் என்று, பைதாகரியர்கள் எண்ணினர். அவ்வாறான மேன்மை வாய்ந்த கணித நூலைத் தாம் கண்டுபிடித்து, நிறுவியதைப்பற்றி அவர்கள் பெருமை பாராட்டிக் கொண்டனர். நீண்ட காலத்திற்குப் பின் யூடாக்ஸஸ் என்ற கணித நூலறிஞர், பைதாகரியர்கள் கண்டு பிடித்தவற்றினின்று மந்திரத்தை யகற்றிவிட்டு, உண்மையான பகுதிகளை மட்டும் கொண்டு, உயரிய கணிதநூலை நிறுவினர். அது வாழ்க்கையிலும் பயனுறுமாறு அமைந்தது. யூடாக்ஸிஸ் பின்பற்றிய வழியிலேயே மேலும் மேலும் கவனஞ் செலுத்தியதால், மிகவும் பிற்காலத்தில், நியூடன் என்ற விஞ்ஞானப் பேரறிஞர், இக்காலத்து விஞ்ஞான முழுமைக்கும் இன்றியமையாததான நுண்மாற்ற வீதக் கணக்கீடு வழிகளைக் கண்டு பிடித்தார்.

விஞ்ஞானத்திலும் மந்திரம் புகுந்ததால், விஞ்ஞான வளர்ச்சி தடைப்பட்டது. மந்திரவியல் எழுதற்கு முக்கியமான காரணம், எவ்வகையான தொழிலும் செய்யாது, தமது வாழ்நாட்கள் முழுமையும் ஒழிவு நேரமாகவே கொண்டவர்களுக்கு இடந்தந்த வகையில் சமூக அமைப்பு முறை ஏற்பட்டதே எனலாம். எனவே, விஞ்ஞான முன்னேற்றமும், சமூக அமைப்பு முறையும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளனவென ஏற்படுகின்றது.

'பேசாவிட்டால் 'வழக்கில்லை' என்பார்கள். அதுபோல் தான் 'மௌனம் கலக நாஸ்தி !'

# பேசாதே! ★

கிச்சு ★

மேரியும் ஜானும் கல்யாணம் செய்துகொண்டு ஒரு வருஷம் கூட ஆகவில்லை. அதற்குள் அவர்களுக்குள் சண்டை ஆரம்பித்து விட்டது. ஒரு நாள் அவன் வெளியே போயிருந்தான். வந்து விடுவான் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள் மேரி. மணி பத்தே கால் ஆச்சு; பத்தரை ஆச்சு. அவனைக் காணோம். அவளுக்கோ பசி. அவர்கள் இரண்டு பேரும் சேர்ந்து தான் சாப்பிடுவது வழக்கம். இத்தனை நாழிகை எங்கே போயிருக்கிறான் என்று அவளுக்குக் கோபம் வந்துவிட்டது. பதினொன்று அடிக்கப் பத்து நிமிஷம் இருக்கும். அப்பொழுது தான் அவன் வியர்க்க விருவிருக்க வந்தான். வரும் பொழுதே கோபமாய் வந்தான். நாளைக்குத் தருகிறேன் என்று கைமாற்றுக் பத்து ரூபாய் வாங்கிக் கொண்டுபோன விக்டர் ஒரு மாசமாகியும் பணத்தைத் திருப்பிக் கொடுக்கவில்லை. எத்தனை தரம் அவன் வீட்டுக்கு அலைகிறது என்று அவனுக்கு கோபம்.

"இத்தனை நாழிகை எங்கே போயிருந்தாய் ?" என்று மேரி கேட்டாள்.

"எங்கே போயிருந்தால் உனக்கென்ன? உன் காரியத்தைப் பார்" என்றான் அவன் கோபத்துடன்.

மேரிக்கு மூக்குக்கு மேலே கோபம் வந்துவிட்டது.

"என்ன சொன்னே? என் காரியத்தை நான் பார்க்க வேண்டுமா?"

"இன்னொருத்தியா யிருந்தால் நீ படுகிற பாடு தெரியும்" என்றாள்.

"என்னை என்ன செய்ய முடியும்?" என்றான்.

"உன்னை இத்தனை நாழிகை சந்தி சிரிக்கும்படிக்குச் செய்திருப்பாள். உன்னைப்போன்ற மடையனை நானுக் கொண்டு கல்யாணம் செய்து கொண்டேன். உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளுகிறதைக் காட்டிலும் இந்தக் குட்டிச்சுவரைக் கல்யாணம் செய்துகொண்டிருக்கலாம்" என்றாள்.

இதுமாதிரி அவள் பேசியது எரியும் தீயில் எண்ணெயை விட்டது போல இருந்தது.

"இப்பதான் என்ன மோசம் போச்சு? இந்தக் குட்டிச்சுவர் ஒரு இடத்திற்கும் போகவில்லை. அங்கேயே தான் இருக்கு. நீயும் இங்கே தான் இருக்கிறாய். நான் உனக்கு விடுதலை கொடுத்து விடுகிறேன். நீங்கள் இரண்டுபேரும் கல்யாணம் செய்து கொள்ளலாம்" என்றான்.

"உன்னைக் கேட்டுத்தான் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமா?"

"வேண்டவே வேண்டாம். உன்னைப் போன்ற அடங்காப் பிடாரியைக் கட்டிக்கொண்டு திண்டாடுவதைக் காட்டிலும் சன்னியாசியாய்ப் போகலாம் என்றான். அவளும் ஏதோ பேச வாயெடுத்தாள். அச்சமயம் அருகிலிருந்த மாதா கோவிலில் மணி பதினொன்று அடித்தது. திடீரென்று உலகத்தின் வாயில் துணியை அடைத்ததுபோல் ஒரே நிசப்தம் பரவியது. தெருவில் ஓடிக்கொண்டிருந்த கார்களும் டிராம்களும் அப்படியே நின்று விட்டன.

அது நவம்பர் மாதம்; சென்ற மகா யுத்தத்தில் மாண்டவர்கள் ஞாபகார்த்தமாக இரண்டு நிமிஷம் பேசாமல் இருக்க வேண்டிய தினம் அதுதான் என்று அப்பொழுது அவர்களுக்கு ஞாபகம் வந்தது. இரண்டு நிமிஷம் அவர்கள் பேசவில்லை. அவர்கள் வாய்களில் வார்த்தைகள் அப்படியே சிறைப்படுத்த பட்டன. எப்பொழுதுடா அந்த இரண்டு நிமிஷமும் முடியப் போகிறது, வாயில் வந்தபடி ஒருவரை ஒருவர் பேசலாம் என்று இருந்தார்கள். ஆனால் ஒரு நிமிஷம் ஆனவுடன் அவர்கள் கோபம் தணிந்து விட்டது:

"நம்மைப் பூரண மனதுடன் காதலிக்கும் மேரியைக் கண்டபடி பேசினோமே, அவள் கேட்ட கேள்விக்கு நாம் ஏன் சரியாகப் பதில் சொல்லியிருக்க கூடாது? நாம் பண்ணியது தப்பு" என்று ஜானுக்குத் தோன்றியது.

"ஜான் காலை எட்டு மணிக்குப் போனவன் எங்கேயோ போய் அலைந்துவிட்டு வந்திருக்கிறான். வந்ததும் வராததுமாய் நாம் அதுமாதிரி கேட்டது தப்பு. நம்மிடம் அவன் விஷயத்தைச் சொல்லாமல் யாரிடம் சொல்லப் போகிறான்!" என்று மேரிக்குத் தோன்றியது. அந்த இரண்டு நிமிஷமானவுடன் முகத்தில் ஒரு புன்னகையை வரவழைத்துக்கொண்டு,

"ஜான்! ஏதோ கோபத்தில் சொல்லிவிட்டேன். நான் சொன்னதை மனதில் வைத்துக் கொள்ளாதே. சாப்பிட வா" என்றாள்.

"மேரி! உன் பேரில் ஒரு பிசகுமில்லை. என் பேரில்தான் பிசகு. இந்தக் கடன்காரன் விக்டர் வீட்டிற்கு எத்தனை தரம் அலைகிறது என்று கோபமாய் வந்தேன். நான் சாவகாசமாய்ச் சொல்ல மாட்டேனா? அதற்குள் என்ன அவசரம் என்று கோபம் வந்து விட்டது." என்று சொன்னான். இரண்டு பேரும் சமாதானமாய்ப் போய்விட்டார்கள். அன்று முதல் அவர்களுக்குள் சச்சரவு ஏற்படவில்லை. இருவருக்கும் ஏதாவது கோபம் வந்து விட்டால் ஜான் எங்கேயாவது வெளியில் போய்விட்டு ஒரு மணி நேரம் கழித்துத்தான் வருவான். அதற்குள் இருவருக்கும் கோபம் சாந்தமடைந்துவிடும். தாங்கள் அனுபவத்தில் கண்ட விஷயத்தை, (மௌனம் கலகம் நாஸ்தி என்கிற விஷயத்தை) அவர்கள் ஊரில் புதிதாகக் கல்யாணம் செய்து கொள்ளும் தம்பதிகளுக்கு அடிக்கடி சொல்லுகிறார்கள்.

**முன்கதை: ஐம்பத்தோரு வயது நிறைந்த ஜானுடைய ஆபீஸில் அவருடைய பழைய காதலியின் மகளாகிய பத்தொன்பது வயது நிரம்பிய எட்ஜ்காம் குமாஸ்தாவாக வந்து அமர்ந்தாள்...மேலே படிக்கவும்.**

# காதலும் பிராயமும்

(ஆல்பிரட் எச். மைல்ஸ்)

கு. அழகிரிசாமி மொழி பெயர்த்தது.



ஜான் ஒரு உண்மையான மனிதர். தம்முடைய பழைய காதலியின் மகளாகிய எட்ஜ்காமைப் பொறுத்த மட்டிலும் மிகவும் உண்மையாக இருந்தார். அவளிடம், தான் மிகவும் பிரியமாக நடந்து கொண்டதைத் தவிர அவளுடைய தாயாருக்கும் தமக்கும் உள்ள சிநேகிதத்தைப் பற்றி ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. அவளுக்கோ ஜான் தன்னை ஒரு வேலையில் அமர்த்தித் தாராளமான சம்பளம் கொடுத்துத் தன் ஒண்டி வாழ்க்கையின் கஷ்டத்தை நிவர்த்தி செய்த ஒரு நேர்மையான புருஷர் என்பதைத் தவிர, வேறு ஒன்றும் தெரியாது. அவர் அவளுக்கு அநேக புத்தகங்களைப் படிக்கக் கொடுத்து அவள் ஏகாந்தத்திற்கு இன்பம் ஊட்டுவார். புஷ்பங்களைக் கொடுத்து வேலையில் உற்சாகமாய் இருக்கச் செய்வார். சிநேகிதத்தன்மையின் வரையறையைக் கடந்து பின்னும் அதிக பாந்தவ்யத்தோடு அவர் பழகும் சமயத்தில் அவருடைய சுயநல மற்ற அன்பை அவள் போற்றுவதைக் கண்டார். அதுபோலவே சுயநல மற்ற காதலுக்கும் ஏதாவது தடங்கல் இருந்ததாகத் தோன்றவில்லை. ஆனால், அவளை ஒரு தற்காலீக ஏற்பாடாகத்தான் வேலைக்கு வைத்துக் கொண்டது. அதாவது ஒரு நல்ல ஏற்பாடு புலப்படும் வரை.

அவர் எட்ஜ்காமிடம் தம் ரகசியத்தை மரண பரியந்தமும் வெளியிடக் கூடாது என்ற உறுதியோடு இருந்தார். தம்முடைய பழைய காதலிக்காக எட்ஜ்காமுக்கு இயன்ற அளவு நன்மை செய்யத் தீர்மானித்தார். தம் காதலியின் மகள் எதிர் காலத்தில் எவரிடத்திலும் எவ்வித உதவியையும் நாடாதிருக்கும் பொருட்டு அவளுக்கும் ஒரு வருவாய் தேடிக் கொடுக்கத் தம் மரண சாஸனத்தில் ஒரு குறிப்பு எழுதி வைத்தார். காப்ட்ஹால் தோட்டம் தம்மை இழந்து, தம் சொத்துக்களை எல்லாம் மரணசாஸனத்தைப் பரிசீலனை செய்வோர் கைப்பற்றி எட்ஜ்காமிடம், 'ஜான் உன் ஜீவனாம்சத்துக்கென்று ஒரு சிறு வருஷாந்திர வரவைத் தேடிக் கொடுத்துள்ளார்' என்று சொல்லும் ஒரு காலத்தைத் தம் மனதில் கற்பனை செய்து பார்ப்பார். ஆனால், அதெல்லாம் எதற்கு? இப்போதிருந்த மாதிரியே ஏன் வாழ்க்கை நடந்து வரக் கூடாது?

ஆனால், தம்முடைய சக்தியை அவர் சரியாகக் கணக்குப் போட்டுப் பார்க்கவில்லை; இதுவரையும் வெற்றிடமா யிருந்த அவர் உள்ளத்தில் பழையபடியும் சிந்தனைகள் குவியத் தொடங்கின. முன்னால் தம் காதலியை அவர் பார்த்த ஓக்—மர ஏணி இப்போது 22-ம் நம்பர் காப்ட்ஹால் மாளிகையாக உரு மாறிவிட்டதுபோல் தோன்றியது. அந்த ஏணியில் மிதித்து நடந்து செல்பவை முன்போ லில்லாமல் சின்னஞ் சிறு நடன பாதங்களாக் மாறின. ஏணி யுச்சியிலிருந்து எட்ஜகாமின் முகம் தோற்ற மளிப்பது அவருடைய இருதயத்தில் ஒரு புது நாள் பிறந்து சூரியோதயம் ஆவதுபோல் இருந்தது. இப்போது அவர், தாம் ஏணியின் அடியிலேயே நின்று கொண் டிருக்க முடியாது என் பதை உணர்ந்தார். ஒன்று, முன்னேறிப் போக வேண்டும்; அல்லது பின் நோக்கித் திரும்பவேண்டும். காலம் ஓடிக் கொண் டிருக்க அவர் மனக் குழப்பமும் அதிகரித்துக் கொண்டு வந்தது.

எட்ஜ்காம் ஜானிடம் வேலைக்கு வந்து ஆறு மாதங்கள் ஆகின்றன. அன்று தான் அவர் முதல் முதலாக் அவளிடம் சொல்லிக் கொள்ளாமல் வெளியே சென்றது.

மறுநாள், காப்ட்ஹால் மாளிகையில் ஒரே பரபரப்பு. மேஜை மீது இருக்கும் புஷ்ப ஜாடிகள் கூட ஏதோ அவசர வேலை செய்பவை போன்று பட பட என்று ஆடின. அந்தப் பெரு நகரில் அநேக ஆபீஸ்களில் தபால் எழுதும் நாள் அதுதான். ஜான் தம் வேலையை முதலில் முடித்து, ஆபீஸைப் பூட்டிவிட்டு கடிதங்களைக் கொடுக்கும் போது இதுவரைக்கும் எட்ஜ் காமுக்கு ஏதாவது தாம் செய்த உபசரணைகளில் குறைவு நடந் திருந்தால் அந்தக் குறையை நிவர்த்திப்பவர்போல் இரட்டிப்பு கௌரவத்தோடு உபசரித்து அவளை வீட்டுக்கு அனுப்பினார். எட்ஜகாம் பெட்டியைப் பத்திரமாகப் பூட்டிவிட்டு ஜானுடைய அந்தரங்கக் கடிதங்களையும் எடுத்து யந்திரம் போல அவற்றிற்கு 'ஸ்டாம்ப்' ஒட்டி அவற்றைத் தன் பையில் போட்டுக் கொண்டு, தன் வீட்டுக்குச் செல்லும் வழியில் உள்ள லாம்பார்டு தெரு தபால் ஆபீஸுக்குப் புறப்பட்டாள். அங்கே சென்று வெளி யிடங்களுக் குப் போகும் கடிதங்களையும் ஸ்தலத்திற்குச் செல்லும் கடிதங் களையும் பிரித்தாள். அவற்றில் அந் நகரததிலேயே ஒரு பாகத் துக்குச் செல்லும் கடிதம் ஒன்றைப் பார்த்தாள். அது ஜானுடைய கையாலேயே "எட்ஜ்காம், ஷ்ரப்பரி சாலை, டால்ஸ்டன்" என்று விலாச மிடப்பட் டிருந்தது. இதைக் கண்டதும் அவ ளுக்கு ஆச்சரியமும் பரபரப்பும் உண்டாகி விட்டது. ஜான், தன்னை ஏதோ சில காரணங்களை முன்னிட்டு வேலையிலிருந்து நீக்கத் தீர்மானித்ததாகவும், தம் தீர்மானத்தை இந்த மாதிரி கடிதத்தின் மூலம் வெளியிட் டிருக்கலாம் என்றும் அவள் எண்ணினாள்.

குமாஸ்தா உத்தியோகம் எட்ஜ்காமுக்குப் பிடித்தமாக இருந் தது. தன் எஜமானரை மிக அன்போடு கௌரவித்தாள். அவ

ளுடைய சம்பளம் அவளுக்குத் தேவையான செலவுகளுக்கெல் லாம் கட்டி வந்தது. தவிரவும் அவள் தபால் ஆபீஸ் சேமிப்பு நிதியில் போட்டு வரும் தொகையும் அதிகரித்துக் கொண்டு வந்தது. தன் வேலையை இழந்து, வேறு ஏதாவது ஒரு வேலைக்கு முன்போலவே பத்திரிகை விளம்பரங்களை நம்பிக்கை இழந்து பார்த்துக் கொண் டிருக்கவேண்டிய கஷ்டத்தை அவள் நினைத் துப் பார்த்தபோது அப்படியே அவளுடைய கன்னங்களில் ரத்த ஓட்டம் நின்றுவிட்டது; கண்களும் சொருகி விட்டன. அப்போது ஆறு மணி என்பதற்குக் கன்னிமரியா கோவிலில் அடித்த மணியோசை கேட்டிராவிட்டால் அவள் மூர்ச்சை யுற் றுக் கீழே விழுந்திருப்பாள். மணி யடித்ததும் தன் வேலையின் மீது அவள் கவனம் சென்றது. உடனே கடிதங்களை எல்லாம் தபால் பெட்டிக்குள் போட்டாள்.—ஆம், தனக்கு வரப்போகும் அந்தக் கடிதத்தையும் பெட்டியில் போட்டு விட்டாள்.

அடுத்த ஒரு மூன்று நான்கு மணி நேரம் அவளுக்குப் பர பரப்பாக இருந்தது. தன்னுடைய கஷ்டங்களை எல்லாம் கற்பனை செய்து பார்த்தாள். அந்தக் கடிதத்தைத் தபால பெட்டியில் போட்டு அதை மறுபடியும் பத்து மணித் தபாலுக்கு ஷ்ரப்பரி ரோட்டி லிருந்து தான் வாங்கப் போகும் அந்த நாலு மணி நேரத்தில் அவள் தன் வாழ்க்கைப் படிகளில் மடந்தைப் பிரா யத்திலிருந்து விருத்தைப் பிராயத்திற்கு அகன்ற தொரு அடி வைத்துத் தாவிய மாதிரி கிழடு தட்டிப் போனாள். இப்படி பெருங் கவலை அவளை வாட்டியது அவள் தன் தாயாரை இழந்த போதுதான்.

ஆம். இந்தக் கஷ்டத்திலிருந்து தப்ப வழியில்லை. அந்த உயிர் வதைக்கும் கடிதம் பலருடைய கைகளையும் கடந்து தன் கைக்குக் கிடைக்கும் வரை பேசாமல் காத்திருக்க வேண்டியது தான். அவள் வீட்டை நோக்கி நடந்து செல்லும் போது வீசிய இரவு நேரத்துக் குளிர் காற்று அவளுக்குக் கொஞ்சம் தெம்பு கொடுத்தது. தன்னால் ஆனமட்டும் முயற்சி செய்தாவது வேலையை விட்டுவிடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும் என்று தீர்மானித்தாள். ஷ்ரப்பரி ரோட்டை அடையு முன்பே தான் இன்னும் வாசித்துப் பார்க்காத அந்தக் கடிதத்திற்கு இரண்டு மூன்று விதமான பதில் கடிதங்களை மனதுக் குள்ளேயே தயா ரித்து வைத்துக் கொண்டாள். அந்திநேரச் சாப்பாட்டு நேரத் துக் கப்புறம் (ஆனால் அவள் அன்று சாப்பிடவில்லை) அவள் தன் கையால் எழுதவொண்ணாத எண்ணங்களையெல்லாம் கடிதத் தில் கொட்டுவதற்காக உட்கார்ந்தாள்.

ஏதோ கொஞ்சம் எழுதினாள். துக்கத்தால் பீடிக்கப்பட் டிருந்தாலும் அவள் தன் மனோதிருப்தியை இழந்துவிடவில்லை. தன்னுடைய வேலையில் எப்போதாவது அசட்டையாய் இருந்த தாக அவளுக்கு ஞாபகமில்லை—அவளுக்கு ஏற்றபடி வேறு ஏதா

வது வேலைகள் இருக்கின்றனவா ?—பின்னும் ஒரு முறை அவர் சந்தர்ப்பம் அளிக்க மாட்டாரா ?— உம் — அப்புறம் ?— அதை அவள் எழுத விரும்பவில்லை. ஆனாலும் எழுதினாள்—ஒருவேளை குறைந்த சம்பளத்திற்கு அவர் அவளை வேலைக்கு எடுத்துக் கொள்ளலாம் அல்லவா ?

கடைசியில், அந்தக் கடிதம் வந்து சேர்ந்தது. தபால்காரன் வந்ததும் கதவண்டை ஓடிப்போய்க் கடிதத்தைப் பெற்றுக் கொண்டு அவன் நகருவதற்கு முன்பே வீட்டுக்குள் ஓடிவந்தாள். வந்ததும் கதவைத் தாளிட்டுவிட்டு ஏக்கமும் பெருமூச்சுமாக் ஈஸிச்சேரில் போய் விழுந்தாள்.

அந்தக் கடிதத்தின் வாசகம் முற்றிலும் ஆச்சரியமாக இருந்தது. உண்மையான விஷயங்களைத் தொகுத்த ஒரு அறிக்கையாகவே இருந்தது :

"அன்பு மிக்க கிளாட் எட்ஜ்காமுக்கு,

"எனக்கு இப்போது ஒரு கஷ்டம் நேர்ந்துள்ளது. அதை உன் உதவியில்லாமல் தவிர்க்க முடியாது. இதை நீ நன்றாகக் கவனிக்க வேண்டும். என் ஆபீஸில் நீ நிறைந்து காட்சி யளித்த மாதிரி என் உள்ளத்திலும் நிறைந்து விட்டாய். என்னுடைய ரகசியம் ஒன்றை உனக்குத் தெரியப் படுத்தக் கூடாது என்று முயற்சி செய்து பார்த்தேன். ஆனால், என்னால் அது இயலவில்லை. அதை உனக்கு வெளியிடுவதன் மூலம் நம் மிருவ ரிடையே தடங்கலாக ஒரு பெரிய மதில் கிளம்பும் என்றாலும், அதைக் கூறக் கடமைப் பட்டிருக்கிறேன்.

"அம்மா ! உத்தியோக மில்லாமல் சம்பளம் கொடுப்பதையோ, அல்லது சில சந்தர்ப்பங்களில், சம்பளம் கொடுப்பதற் காகவே உத்தியோகத்தில் வைத்துக் கொள்வதையோ சமூகம் சம்மதிக்காது. சம்மதிக்குமோ சம்மதிக்காதோ, நீ பழையபடியும் உலகத்தை எதிர் பார்த்துக் கஷ்டங்களை அனுபவிக்க நேர்ந்தால் அது என் குற்ற மல்ல என்று உறுதியாக அபிப்பிராயப் படுகிறேன். ஆனால் நீ உன் வாழ் நாட்களைக் கழிப்பது எப்படி என்று என்னிடம் உதவி நாடி வந்தால், நான் உன்னிடம் மிக்க விசுவாசம் வைத்து உதவி செய்யத் தயாராய் இருக்கிறேன். பழையபடியும் நீ இந்த வேலையில் அமர்ந்திருக்க இஷ்டப்பட்டால் அப்படியே செய்து கொள்ளலாம். ஆனால் நம்மிடையே ஏற்பட்ட இந்தச் சிறு மாறுபாட்டத்தை வெளிக் காட்ட வேண்டாம். நீ அடக்கத்தோடு ரகசியத்தைக் காப்பாற்றுவாய் என்ற நம்பிக்கையின் பேரில் இதைச் சொல்லுகிறேன். என்னுள்ளே இருக்கும் ஒரு உணர்ச்சியை உனக்குக் காட்டாமல் இனி நாம் ஒருமித்த சிந்தையில் வாழ் நாட்களைக் கழிக்க முடியாது என்ற எண்ணம் எனக்கு விழுந்து விட்டது.

"எட்ஜ்காம் ! நான் ஒரு வாலிபனா யிருந்தால் உன்னை மார்டன் லாட்ஜில் வேலைக்கு வைத்துக் கொள்ளுவேன். அங்கே பூஞ் செடிகளைச் சீர்திருத்திக் கவனத்தோடு பரிபாலனம் செய்வதற்கு,

ஆள் வேண்டி யிருக்கிறது. அந்த வேலைக்கு உன்னைத் தவிர வேறு யாரும் லாயக் கில்லைதான். ஆனால், நானோ நாளுக்கு நாள் முதுமையை அடைந்து கொண்டு வருகிறேன். நீயோ ஒரு இளம் நாயகனின் கை பிடித்து, அவனோடே வாழ்க்கையின் இன் பானுபவங்களை யெல்லாம் அனுபவித்து, அவனுடைய பாதுகாப்பி லேயே வாழ்வின் கொந்தளிப்பையும் போராட்டத்தையும் கடக்க வேண்டியவள். அதனால் நீ மனம் வைக்கும் காதலன் யாராவது இருந்தால், இப்பொழுதோ அல்லது பின்போ அவனோடு சந்தோஷ கரமாக வாழ்க்கை நடத்த எண்ணி யிருந்தால், என் சக்திக்கு இயன்ற வழிகளில் உன் ஆசைக் கனவுகளையெல்லாம் பலித மாக்குவதே, என் மாபெரும் இன்பம் என்பதைத் தெரிவித் துக் கொள்ளுகிறேன்''

இவரைவிட அவளுக்கு வேறு எந்த உண்மையான மனிதன் கிடைக்கப் போகிறானோ!

மறு நாள் ஜான் தாமே ஆபீசைத் திறந்தார். நாலு மணிக் குச் சாப்பிடும் தேநீர் அன்று அவருக்குக் கிடைக்க வில்லை. மாலை ஐந்து மணிக்கு ஆபீஸைப் பூட்டி விட்டுத் தாமே தம் காவற்கார னிடத்தில் சாவியைக் கொடுத்தார். கடிதங்கள் சம்பந்தப்பட்ட வைகளில்—நல்ல வேளையாக அன்று தபாலில் போட வேண்டிய கடிதங்கள் அதிகமில்லை—அன்றைய தினம் அவர் என்றும் காணாத மாதிரி மிகவும் சோம்பலாக இருந்தார். பூஞ் செடிகளுக் குக்கூட அன்று சோம்பல் ஏறிவிட்டதுபோல், அவைகளைப் பார்க்கையில் சாக்கடைத் தண்ணீர் போலவும் சமாதிக் குழிகளைப் போலவும் தோன்றின. அந்த ஆபீஸில் அங்கும் இங்குமாக இயங்கிக் கொண்டிருந்தது ஜான் தான். பகல் எல்லாம் ஒரு அறையிலிருந்து மற்றொரு அறைக்கு முன்னும் பின்னுமாக உலா விக் கொண்டிருந்தார்.

எட்ஜ்காம் தனக்குச் சொந்தமான அநேக சாமான்களை ஆபீஸின் வெளி அறையில் வைத்துப் போய் விட்டாள். அவைக ளெல்லாம் இப்போது ஜானுடைய கவனத்தைக் கவரும் வஸ் துக்க ளாகி விட்டன. அவற்றில் பழைய மணி பர்ஸ் ஒன்று. அதனுள்ளே எட்ஜ்காம் ஸ்டாம்புகளை வைத்திருப்பாள். அவர் அதில் ஒரு பவுன் நாணயத்தைப் போட்டு வைத்தார். இதோடு அவர் தம் பிம்பத்தைக் கண்ணாடியில் பார்க்கையில் "எவ்வளவு கிழடுதட்டிப் போனோம்" என்று எண்ண மிடுவார்!

மறுநாள் ஜான் தமக்குத் தாமே குமாஸ்தாவாக இருந்தார். எட்ஜ்காமிட மிருந்து ஒரு பதிலும் வராததால் அவருக்குப் பதற் றம் உண்டாகி விட்டது. அதனால் ஒரு தீர்மானம் செய்தார். மறுநாள், முதல் தபாலில் அவளிட மிருந்து ஒரு தகவலும் வரா விட்டால் தாம் நேராகவே அவளுடைய இருப்பிடத்திற்குச் சென்று விசாரித்து வரவேண்டும் என்று தீர்மானித்தார்.

அடுத்த நாள் பத்தரை மணி வரையில் ஒரு கடிதமும் காணோம். உடனே ஒரு வண்டியில் ஏறிக்கொண்டு டால்ஸ்டன்

என்ற அவளுடைய வாசஸ்தலத்திற்குச் சென்றார். அவர் எத்தனையோ அதிர்ச்சிகளைச் சமாளித் திருக்கிறார். ஆனால் இதைச் சமாளிக்க முடியவில்லை. அவளுடைய பக்கத்து வீட்டுக் காரி ஒருத்தி ஜானிடம், எட்ஜ்காம் முதல் நாள்தான் யாதொரு விலாசமும் கொடுக்காமல் வீட்டை விட்டுச் சென்றதாகவும் ஒரு சரியான இடத்தில் நிலைப்பான ஒரு வேலையில் அமர்ந்ததும் விலாசத்தைத் தெரிவிப்பதாகச் சொன்னதாகவும் சொன்னாள். மேலும், "ஐயா, அவள் மனோ தைரியம் உடைய பெண்தான் என்றாலும் மிகவும் மனசு நொந்துபோயிருந்தாள். என்ன இருந் தாலும் சிறிசுதானே! நல்ல காரியம் ஏதேனும் நடந்திருந் தால் சந்தோஷப் படவேண்டியது தானே முறை? அழுவார்களா? —ஆனால் அவள் அழுது கொண்டே இருந்தாள். எங்கிருந்தோ அவளுக்கு ஒரு கடிதம் வந்தது. அதுதான் அவளை இப்படி வாட்டிவிட்டது. என்னைக்கூடி அந்தக் கடிதம் வாட்டி எடுத்து விட்டது ஐயா. அவளுக்கு ஒரு நல்ல இடத்தில் கிடைத்திருந்த வேலை போய் விட்டது. அதோடு ஒரு நல்ல முதலாளியினுடைய தொடர்பையும் இழந்துவிட்டாள்" என்று சொன்னாள்.

ஜானுக்கு ஒரே குழப்பமாய் விட்டது. காப்ட்ஹால் மாளி கையை நோக்கி அவர் திரும்பிச் செல்லுகையில், அவருடைய உள்ளத்தில் ஒன்றன்பின் ஒன்றாகப் பயமுறுத்தும் எண்ணங்கள் ஓடிக் கொண்டிருந்தன. அவர் அவளைத் தேடிக் கண்டு பிடிக்க ஒரு போலீஸ் ஸ்டேஷனில் தெரிவிக்கலாம்; ஒரு துப்பறிவோனை நியமிக்கலாம்; 'டைம்ஸ்' பத்திரிக்கையில் விளம்பரம் செய்ய லாம்——ஆனால் அவருக்கு ஒரு வழியும் தோன்றவில்லை.

ஆபீஸுக்கு வந்ததும், அவர் வெளியே போயிருந்த சமயத் தில், அவர் விலாசத்துக்கு வந்த கடிதம் ஒன்று அங்கே கிடந்த தைப் பார்த்தார். ஷ்ரப்பரி ரோட்டி லிருந்துதான் அது எழுதப் பட்டிருந்தது. அதை எட்ஜ்காம் டால்ஸ்டனை விட்டுக் கிளம்பிய பின் தபாலில் போட்டிருக்கிறாள். கடிதம் வெகு சுருக்கமாக இருந்தது:

"ஷ்ரப்பரி ரோடு,

"டால்ஸ்டன்.

"ஜான் அவர்களுக்கு,

"தாங்கள் என்மீது காட்டிய அன்புக்கு என் வணக்கம். அதி லும் பல கஷ்டமான நிலைமைகளிலும் எனக்கு உதவி புரிந்த தற்கு என் மனமார்ந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளு கிறேன். தாங்கள் எனக்கு எவ்வித உதவிக ளெல்லாம் செய்திருக் கிறீர்கள்! என் தாயாரை அறிந்தவரும் காதலித்தவருமாகிய தங் கள் மீது யான்கொண்ட மதிப்பு எக்காலத்திலும் அழியாது. ஆனால் என்னைப் பொறுத்த மட்டிலும் தங்களுக்குத் தொந்தர வைக் கொடுக்கா திருப்பதற்கு, நான் தங்கள் பார்வைக்கும் கேள்

விக்கு மெட்டாத ஓர் இடத்தில் வாழ்வதே நல்லது. வள்ளல் போன்ற உங்கள் குண விசேஷத்துக்கு என் வணக்கம்.

"நான் திக்கில்லாமல் ஒன்றும் தவிக்கவில்லை. எப்படியும், முன் போல் அவ்வளவு சந்தோஷமாக இல்லாவிட்டாலும் ஒரு வேலை தேடிக் கொள்ளுவேன். அதன் மூலமாக, என் மதிப்பிற் குரிய ஒருவருக்குத் தொந்தர வளிக்காமல் இருந்துகொள்ளலாம் அல்லவா? என்னுடைய நீக்கத்தால், முன்னறிக்கையின்றி நான் விலகியதால், காப்ட்ஹால் மாளிகையில் தற்காலீகமாக அசௌகரியங்கள் உண்டானால், அதற்காக என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். ஆனால் என்னைத் தியாகம் செய்வதினாலாவது, தாங்கள் நிரந்தரமான சௌகரியங்களை அடைவீர்கள் என்று நம்புகிறேன்."

* * * *

அன்றையத் தினம் கிறிஸ்துமஸுக்கு முதல் நாள் மார்லை எட்ஜ்காம் கடிதம் கிடைத்து அன்றோடு ஒரு வாரம் ஆகிறது காப்ட்ஹால் தோட்ட மாளிகையில் ஜான் தனியாகத் தம் ஆபீஸ் அறையில் உட்கார்ந்து கொண் டிருந்தார். ஒரு புதிய குமாஸ்தாவை நியமிக்கவோ அல்லது பழைய குமஸ்தாவைத் தேடவோ அவர் யாதொரு முயற்சியும் செய்யவில்லை. அதாவது தன் சுகத்துக்காகவோ அல்லது அவள் சுகத்துக்காகவோ ஒன்றும் செய்ய முற்படவில்லை. அந்தி மயங்கி இரவு வந்து கொண் டிருந்தது. அவர் விளக் கேற்றவில்லை. ஆனால் மேஜைமீது முழங் கைகளை ஊன்றி அவற்றில் தம் நாடியைத் தாங்கிய வண்ணம் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவருக்கும் மிகவும் துயரமாக இருந்தது. காப்ட்ஹால் மாளிகையி லிருந்துகொண்டே இப்படிக் கவலைப்பட்டுக் கொண் டிருப்பதைவிட, மார்டன் லாட்ஜுக்குப் போவோமே என்று தோன்றியது அவருக்கு.

அப்போது, காப்ட்ஹால் மாளிகையின் மறுபக்கமாக ஒரு அழகிய இளம் பெண் 22-ம் நம்பர் ஆபீஸ் ஜன்னலைப் பார்த்துக் கொண்டே வந்தாள். இதை ஜான் பார்க்கவில்லை. அந்தப் பெண் அந்த ஆபீஸில் பல சிறு சாமான்களை வைத்துவிட்டுப் போய் விட்டாள். சாயங்காலத்துக் கப்புறம் ஜான் வெளியே போனதும், காவற்காரன் அனுமதியைப் பெற்று அவற்றை எடுத்துக் கொண்டு போகலாம் என்று நினைத்து வந்தாள். அவள், பாதை சரியாகத் தெரிகிறதா என்று ஜன்னலை ஏறிட்டுப் பார்த்தாள்.

நீண்ட தொரு பெருமூச்சு விட்டுக்கொண்டு மேலே பார்த்த வண்ணம் தன் காரியத்தின் நிமித்தம் ஏணி வழியாக ஏறிச் சென்றாள். ஜான் அங்கே இருக்கச் சகிக்காமல் மார்டன் லாட்ஜுக்குப் போகலாம் என்று ஆபீஸைப் பூட்டி விட்டு இறங்கி வந்தார்.

பொதுவாக ஏணிப் படிகளிலே ஏதோ ஒரு உயிர் வதைக்கும் சக்தி இருப்பதாக அவருக்குத் தோன்றியது. முன்னும்

அப்படித்தான். ஒரு பழைய ஓக்—மர ஏணிப் படியில் வைத்துத் தான், தம் பழைய காதலிக்குக் கடைசி விடை கொடுத் தனுப்பி ஞர். அப்புறம் தம் புதுப்பிரியையின் பாதங்களோடு நெருங்கிப் பழகியதும் அதே ஏணிப் படிகள் தான். கீழே இறங்கி வந்தார்.

இருவரும் சந்தித்து விட்டார்கள். ஒரு பிசாசுகூட இந்தச் சந்திபபு மாதிரி அவர்களைப் பிரமிக்க வைத்திருக்க முடியாது. எட்ஜ்காம் தள்ளாடிக் கீழே விழுந்திருப்பாள். ஆனுல், ஜான் அவளைப் பலமாக அணைத்துப் பிடித்துக் கொண்டார்.

அவர் தம்மைச் சமாளித்துக் கொண்டு, "மறுபடியும் நாம் சந்தித்துக் கொண்டோம். நான் வாழ்க்கைப் படிகளில் கீழ் நோக்கிச் செல்லுபவன்; நீயோ மேலேறுபவள். உன்னேடு நான் மேலேறி வர முடியாது. அதேபோல் என்னேடு உன்னைக் கீழ் நோக்கி இழுக்கவும் கூடாது. என்ருலும்—உம்—நாம்—நாம் பாதி வழியில் சந்தித்துக் கொண்டோம்.—அதனுல் நான் உன்னை விட் மாட்டேன்—"

"அப்படி யானுல் இதே ஸ்தானத்தில் நாம் இன்னும் சிறிது காலம் இருப்போம்." என்று இலேசாகச் சொன்ளுள் எட்ஜ்காம். மேலும், "ஒருவருடைய வாழ்க்கையை அளப்பது காதலே தவிர காலம் அல்ல" என்ருள்.

அப்படியே வாழ்க்கை நடத்தினர்.

என்ன ஆச்சரியமா யிருக்கிறது! ஐம்பத்தோரு வயதும் பத்தொன்பது வயதும் கலந்து கொண்டன! அவர் அவளைக் கல்யாணம் செய்திருக்கக் கூடாது என்று நீங்கள் சொல்லலாம். ஆனுல், அவர் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளவில்லை! அவள் தான் அவரைக் கல்யாணம் செய்து கொண்டாள். அவ ளைக் கடவுள் ஆசிர்வதிக்கட்டும்!

காலம் செல்லச் செல்ல எட்ஜ்காம் இன்பமயமான யௌவனப் பருவத்தின் பூர்ண வளர்ச்சியும் பெற்றுப் பிரகாசித்தாள். ஜானும் காதலின் மாயா சக்தியால் வாலிபத்தை அடைந்து கொண்டு வந்தார். அவர்களைப் பிரிக்க முடியாது என்று உணர்ந்த எமனும், அவர்கள் இருவரையும் சேர்த்தே, அவர்கள் சம பிராயத்தி லிருக்கும் போதுதான் அவர்களைக் கவர்ந்து சென்ருன்!

# சிலப்பதிகாரம் கற்பனையே

வித்துவான் - வெ. சு. சுப்பிரமணியாச்சாரியார் P. O. L.,



ஆனந்தபோதினி ஆனிமாத இதழில், யான் வெளியிட்டிருந்த "சிலப்பதிகாரமும் ஊழ்வினையும்" என்னும் கட்டுரையைக் கண்டு மருண்டு, வித்துவான் S. P. கம்பீர நைனர் அவர்களும், சு. அ. இராம சாமிப்புலவர் அவர்களும் முறையே ஆனந்தபோதினி, ஆடிமாத இதழில் "சிலப்பதிகாரமும் சிலம்பும்" என்றும் ஆவணிமாத இதழில் "மருட்சியும் ஊழும்" என்றும் வெளியிட்டுள்ள இரண்டு கட்டுரைகளையும் கண்டனம். அக் கட்டுரைகள் யான் கூறியிருக்கும் செய்திகளைப்பற்றி யொன்றும் ஆராய்ந்து முடிவு கட்டாமல் தம்முடைய தலைப்புக் கேற்றவாறு கூறிச் செல்கின்றன.

சிலப்பதிகாரத்தே வருகின்ற பாத்திரங்கள் அனைவருடைய ஊழையும் கூறவேண்டும் என்பது என்னுடைய கட்சியன்று. கோவலன், கண்ணகி, மாதவி ஆகிய இவர்களுடைய ஊழ் கதைக்கு மிகவும் இன்றியமை யாதவை. ஆதலால் அவற்றைக் கூறி யாகவேண்டும் என்பதே என்னுடைய கட்சி.

மணிமேகலையின் தோழியாக வந்த சுதமதி என்பாள் விஞ்சையன் ஒருவனால் தூக்கிச் செல்லப்பட்டுச் சிறிதுநாள் அவனைக் கூடி இருந்து பின்னர் விடப்பட்டமைக்கே "பழைவினைப் பயத்தால் பிழைமணம் எய்தினேன்" என்று அவள் கூற்ருகப் பழையவினை யொன்று கூறப்பட்டிருக்கின்றது. சோழன் கொடுத்த பொன்னரிமாலையால் கோவலனைப் பிணித்துத் தன்வயப் படுத்தி, அவன் கொண்ட மனைவியையும் மறந்து தன்னிடத்தேயே நெடிது நாளிருக்கச் செய்து, பின்னர் யாழின்மேல் வைத்து ஊழ்வினை உறுத்த தாகலின் அவன் பிரிந்து சென்று கொண்ட மனைவியுடன் மதுரையடைந்து கொலை யுண்டான். இங்கு இவர்கள் அதாவது மாதவியையும் கோவலனை யும் நெடிதுநாள் கூட்டிப் பிரித்த ஊழ் யாது? சுதமதிசிறிதுகாலம் விஞ்சைய ஞேடு பிழை மணம் எய்தியதற்கே காரணம் பழையவினை என்று கூறி யிருக்க, மாதவி கோவலன் இருவரும் நல் மணம் பூண்டவர்கள் போன்று நெடுங்காலங் கூடியிருந்து மகப் பேற்றையும் அடைந்தார்கள் என்று கூறி யிருப்பதற்கு ஊழ் கூற வேண்டிய தில்லை என்று கூறுவது பொருந்துமா? மேலும் கோவலன் கொலைக்கு முக்கிய காரணம் மாதவியே! மாதவி இல்லையானல் கோவலன் கண்ணகியை விட்டுப் பிரிவதேது?—மதுரைக்குச் செல்வதேது? கொலை யுண்ணுவது ஏது? ஆதலால் அவள் கோவலன் கதைக்கு மிக மிக இன்றியமையாதவள் என்பது யான் கூற வேண்டுவ தில்லை. இன்றியமையாத இவளுடைய ஊழ் கூறவேண்டிய அவசியமில்லை என்பது சுவையுடை யுணவுக்கு உப்பு அத்துணை அவசியமில்லை என்பது போன்றதாகும்.

'மேருமந்தரம்' போன்ற நூற்களில் ஒருயிர் மற்ருேருயிரைச் சிறிது உற்று நோக்கியதற்கும் ஊழ் கூறியிருக்க, ஊழ்வினை உருத்து வந் தூட்டு வதை வற்புறுத்த வந்த சிலப்பதிகாரத்தில் மாதவியின் ஊழ் கூற வேண்டிய தில்லை என்பது பொருத்தமில்லை.

இனிச் சிலப்பதிகாரம் இலக்கியச் சுவையையுடையது என்பதில் எனக்குக் கருத்து வேற்றுமையில்லை. சிலப்பதிகாரம் ஐம்பெருங் காப்பி

யங்களுள் ஒன்று என்னும் விஷயத்தில் தான் எனக்கு அபிப்பிராய பேதம் ஏற்பட்டிருக்கிறது. சென்னை சர்வகலாசாலை சரித்திரப் பேராசிரியராயிருந்த டாக்டர் S. கிருஷ்ணசாமி ஐயங்கார், M.A., PH.D. அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய 'Manimekalai in its historical settings' என்ற நூலில் மணிமேகலையைப் பெருங்காவியம் என்று கூறுதல் பொருந்தாதென்று இலக்கணச் சான்று கொண்டு நிரூபித்துள்ளார்கள். சிலப்பதிகாரத்தின் தலைவிதியும் அப்படியே; ஆதலால் யான் சிலப்பதிகாரத்தைப் பெருங் காவியமல்லவென்றது புதிதல்ல.

கோவலன் கதை என வழங்கி வரும் குசிலிகடைப் புத்தகத்தில், "கண்ணகி மதுரையைக் கொளுத்திவிட்டு நேரே சென்னையை அடுத்துள்ள திருவொற்றி யூருக்கு வந்து கோயில்கொண்டு நரபலி வாங்கி வருகின்றாள் என்று எழுதி யுள்ளதே. அது உண்மையா? சில அரசகுமாரர்களை நல்வழிப்படுத்த விஷ்ணு சர்மன் என்ற வடமொழிப்புலவன் ஒருவன் கற்பித்த பஞ்ச தந்திரம் என்ற நூலில் கூறி யிருக்கும் பார்ப்பாத்தியும் கீரிப்பிள்ளையும் என்ற கதையைக் கோவலன் மீது ஏற்றிக் கோவலனும் பொருள் கொடுத்துப் பார்ப்பனத்தியைக் காப்பாற்றினன் என்றுர் சிலப்பதிகாரம் கூறுகின்றதே! அது உண்மையா? இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் காலத்தே கோவலன் என்ற ஒருவன் இருந்தான். அவனுடைய ஒன்பதாவது தலைமுறையில் வந்தவன் சிலம்பு-கோவலன் என்றும், அவனே சேரன் செங்குட்டுவன் காலத்தவன் என்றும் மணிமேகலை கூறுகின்றது. இமயவரம்பன் செங்குட்டுவனுடைய தந்தை என்று எல்லோரும் கூறுகின்றார்கள். எனவே தந்தைக்கும் தனையனுக்கும் இடையே ஒன்பது தலைமுறை வந்துள்ளது உண்மையா? அல்லது கண்ணகி தெய்வம் தன்னை வழிபட வந்த மணிமேகலையை நோக்கித்தான் சினந்து மதுரையைக் கொளுத்தியதால் உண்டான பாவத்தைப் போக்கிக்கொள்ள மகத தேசத்தே பிறந்து புத்த பகவானுடைய தருமங்களைக் கேட்டுப் போக்கிக்கொள்ளப் போவதாகக் கூறித் தான் சமணமதத்திற் பிறந்தாற் பயனில்லை என்று கூருமற் கூறியதை உண்மைக்கதை என்பதா?

பெருங்காப்பியத்திற்குக் கூறி யிருக்கும் இலக்கணங்களை நன் குணர்ந்தோர் எவரும் மணிமேகலையையும் சிலப்பதிகாரத்தையும் தனித்தனிப் பெருங்காப்பியம் என்று கூற மாட்டார்கள். இரண்டும் சேர்ந்து பெருங்காப்பிய மாகும். அதுபற்றியே "மணிமேகலை மேலுரைப்பொருள் முற்றிய சிலப்பதிகாரம்" என்ற தொடரும் எழுந்தது. அங்ஙனம் கூறுவதிலும் குற்ற முள்ளது. எந்தக் கதாநாயகன் அறம் பொருள் இன்பங்களையனுபவித்த தாகக் கூறுகின்றதோ அவனே வீட்டுப் பேற்றினையும் அடைதல் வேண்டும் அறம் பொருளின்பங்களை அனுபவித்த சீவகனே வீட்டையும் அடைய முயன்றான் அடைந்தான் என்றும், மேருமந்தரர்களும் அங்ஙனமே அறம் பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கனையும் அடைந்தார்கள் என்றும் கூறி யிருக்கும் நூல்களை யன்றோ பெருங்காப்பியம் என்று கூறுதல் வேண்டும்.

எனவே, மேற்கூறிய இரண்டு நூற்களில் கூறப் பெற்றிருப்பது போன்று பெருங்காப்பியத்துக்கு இன்றியமையாத இலக்கணமாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கனையும் ஒருங்கே சிலப்பதிகாரத்தும் மணிமேகலையிலும் கூறப் பெற்றிருக்கின்றதென்று புலவர் அவர்கள் கூற முன் வர வியலுமா? சிலப்பதிகாரத்தே அறம் பொருள் இன்பம் என்ற மூன்றைத் தவிர அந்தமி லின்பத் தழிவில் வீட்டைக் கோவலனே கண்ணகியோ அடைந்ததாகப் புலவர் கூறுவாரா? மணிமேகலை வீட்டுப் பேற்றை

அடைய முயன்றமை தவிர, அறம் பொருளின்பங்களை அனுபவித்ததாகக் கூறமுடியுமா? எனவே, அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கனையும் அடிபடையாகக் கொண்டுமற்றைய வருணனைகளையும் கொண்டு வருவதல்லவோ பெருங்காப்பியத்தின் இலக்கணம்? கோவலன் நன்மனை புணர்ந்து மக்களைப் பெறுவதை விடுத்து தீ மனைபுகுந்து அவள் மாட்டு மகப்பேறு அடைந்த செய்தி கூறப் பெற்றுள்ளதால் அக் காவியத்தைப் பெருங்காவியம் என்னலாமா?

இனி, சிலப்பதிகாரத்தின் நோக்கத்தை எடுத்துக் காட்டியவர்களுள் தலைசிறந்த வைணவப் புலவராகிய அடியார்க்கு நல்லாரைக் காட்டிலும் வேறு யார் அதன் சுவையை இலக்கண வரம்போடு எடுத்துக்காட்ட இருக்கின்றார்கள்? அவர் காட்டாவிடில் சிலப்பதிகாரம் சிலம்புவதேது? பாஸ்வல் என்ற ஆங்கிலப் புலவனால் ஜான்ஸன் என்ற புலவன் வெளிப்பட்டது போல அடியார்க்கு நல்லாரால் சிலப்பதிகாரம் மிளிருகின்றது.

யான் சிலப்பதிகாரத்தை ஆராய்வதற்கு முக்கிய காரணம்—இந்நூல் பொற்கொல்லர்களுக்குப் பெரிய இகழ்ச்சியைத் தந்து விட்டது என்று கருதி இதனைப் பொய்க்கதை என்று கூறுவதாகக் கூறுகின்றார் புலவரவர்கள். மதப்பற்று, குலப்பற்று, மொழிப்பற்று, நாட்டுப்பற்று என்பவை அனைவருக்கும் உண்டு. முற்றுந் துறந்த முனிவர்களும் இவற்றை விட்டார்களில்லை.

"புலையற மாகி நின்ற புத்தொடு சமணம் எல்லாம்
கலையறக் கற்றமாந்தர் காண்பரோ கேட்ப ரோதான்
தலையறுப் புண்டுஞ் சாவேன் சத்தியம் காண்மினையா!
சிலையினால் இலங்கை செற்ற தேவனே அதிகதேவன்."

என்று தன் மதத்துக்காகத் தான் தலையறுப்புண்டுஞ் சாவதாகப் பெரியார் ஒருவரும் சூளுரை கூறியிருக்கின்றார். இளங்கோவடிகளைப் பல பேராசிரியர்கள் நூலை நன்காராய்ந்து சைவர் என்று முடிவு கட்டியதைக் கண்டு சிலர் அவரைச் சைனர் என்று நிலைநாட்டப் பெரிதும் முயன்று வருகின்றார்கள். நாலடியார் இயற்றியவரைச் சைவர் என்று நாட்டச் சிலர் முயன்று வருகின்றார்கள். அதுபோல் யானும் குலவெறி கொண்டு, அல்லது புலவர் கூறியவாறு கொண்டு, சிலப்பதிகாரத்தை ஆராய எடுத்துக் கொண்டேனில்லை என்பதை உறுதியோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன். சிலப்பதிகாரம் சுமார் நான்காயிரம் வரிகளால் ஆகிய நூலாகும். சுமார் நாற்பதினாயிரம் வரிகளால் ஒன்பது சுவையும் ததும்பப் பாடிய பாடல்களால் குறித்திருக்கும் கதையே (இராமாயணம்) பொய்க்கதை எனப்படுகிறது: அங்ஙனம் கூறுகின்றவர்களுடைய குலம் ஏதேனும் அந்நூலில் பழிக்கப் பட்டிருக்கின்றதா என்று புலவர் கூறமுடியுமா! அவரவர்கள் ஆராய்ச்சியில் தோன்றிய ஒன்றைக் கூறுகின்றார்களே யொழிய வேறில்லை. அதை மறுக்கின்றவர்கள் நேரிய முறையில் தக்க காரணங் காட்டி மறுப்பதோ, உடன் படுவதோ முறையாகும். அதனை விடுத்து, "ஓநாயும் ஆட்டுக்குட்டியும்" போன்று வீணான காரணங் கற்பித்தல் அழகன்று.

மேருமந்தர புராணத்தில் அடைக்கலப் பொருளை அபகரித்ததனால் தன்னை அடைந்து நிந்திக்கப்பட்ட பார்ப்பனன் ஒருவனுடைய செய்தி கூறப் பெற்றிருக்கின்றது. அவன் அபகரித்ததனால் அவமதிக்கப் பட்டான்; இகழப்பட்டான். அதனால் அவன் குலத்துக்கு வந்த இழிவென்ன? ஒன்றுமில்லை. எவனோ ஒருவன் செய்த செயலுக்கும் குலத்துக்கும் சம்பந்தம்

யாது? குற்றம் செய்த பொற்கொல்லன் தண்டிக்கப்பட்டான் என்றால் குலத்துக்கு வந்த இழிவென்னே? என்பது எனக்குப் புலனாகவில்லை. ஒருவன் தான் செய்த குற்றத்துக்காகத் தண்டிக்கப் பட்டான் என்றால் அத் தண்டனையைக் குலத்தின் மீது ஏற்றிக் கூறுவது தவறன்றோ? வேண்டுமானால் அவன் குடும்பத்தின் மீது ஏற்றிக் கூறட்டும்.

சிலப்பதிகாரத்தே; பொன் செய் கொல்லன், பொற் கொல்லன், பொற்றொழில் கொல்லர் என்றே களவாடியவனைக் கூறுகின்றது. பொன்னால் பணி செய்து வயிறு வளர்க்கும் ஒருவனைக் குறித்ததே யொழியக் கம்மிய குலத்தைக் குறிக்க வில்லை. நூல்களெல்லாம் "வித்தகர் கைவினை", "தண்டமிழ்க் கம்மியர்" "சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று", "வித்தகரியற்றிய விளங்கிய கோலத்து" என்ற தொடர்களால் கம்மியர்களைச் சிறப்பித்தே கூறியிருக்கின்றன. இங்கு "வித்தகர்" என்ற ஒரு சொல்லே கம்மியர்களுக் குரிய சிறப்பினை விளக்கும். "வித்தகன்" என்ற சொல் ஞானி என்ற பொருளிலும் ஒழுக்கமுடையவன் என்ற பொருளிலும் வந்திருப்பதைப் புலவர் அறிவர் என்று நம்புகின்றேன். இதனோடு "வித்தகர்க் கல்லா லரிது" என்ற தொடருக்குப் பரிமேலழகர் கூறும் பொருளையும் காண்க. சிலப்பதிகாரத்தே வருகின்ற பொற் கொல்லன், தண்டமிழ் நாட்டுப் பொற்கொல்லன் அல்லன் என்பது அவனுடைய உடை, நடை பாவனைகளை ஆசிரியர் கூறி யிருப்பதிலிருந்து அறியலாகும். இன்னோரன்ன காரணங்களால் சிலப்பதிகார ஆசிரியர் விஸ்வகருமர்களாகிய கம்மிய குலத்தினரை எங்கும் பழிக்கவில்லை. வித்தகர் என்றே கூறியிருக்கின்றார் என்பதைப் புலவர் அவர்கள் இனியாகிலும் அறிந்து கொள்வார்களாக.

நிற்க, சிலப்பதிகாரத்தைக் கட்டுக்கதை என்று கூறினவர்களும் கூறுகின்றவர்களும் பலராவார். சென்னை சர்வகலாசாலை ஆராய்ச்சியாளரா யிருந்த திரு. K. N. சிவராஜப் பிள்ளை B. A. அவர்கள் தம்முடைய 'The Chroology of Early Tamils' என்று ஆங்கில மொழியில்எழுதிய நூலில் "சிலப்பதிகாரம் கூறும் செங்குட்டுவன் சரித்திர சம்பந்த முடையவன் அல்லன். பரணர் கூறும் குட்டுவனுக்கும் அவனுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. என்று கூறி யிருக்கின்றார். இப்போது சென்னை சர்வகலாசாலை தமிழ் பீடராக விருக்கும் தமிழ்ப் பேரறிஞர் திருவாளர் S. வையாபுரிப் பிள்ளை B. A. B.L அவர்களும் "சிலப்பதிகாரத்திற் கண்ட இலக்கண வழக்கு" என்ற தலைப்போடு எழுதியுள்ள ஒரு கட்டுரையில்—"இச் சொல் வழக்கினால் சிலப்பதிகாரம் கடைச்சங்க காலத்திற்குப் பிற்பட்ட நூலென்பது ஐயப்பாட்டிற்கு இடமின்றித் துணியத் தகுவதாயுள்ளது" என்று கூறியுள்ளார். (கதை நிகழ்ந்த காலத்திருந்த புலவரால் எழுதப்பட்டது சிலப்பதிகாரமும் மணிமேகலையும் என்று கூறுவதற்கு முரணாக வல்லவோ இருக்கின்றது: ஆதலால் சங்ககாலத்துக்குப்]பிற்பட்ட காலத்தே கற்பித்த கதையாகும் என்பதில் என்ன ஐயம் உளது? திருவாளர். P. R. மீனாக்ஷிசுந்தர முதலியார் B. A. B. L. அவர்கள் தாம் தமிழில் எழுதி வெளியிட்டுள்ள "தமிழ்நூல் விளக்கு" என்ற நூலில், "சிலப்பதிகாரக் கதையில் முன்னுக்குப் பின்னுள்ள முரண்" என்ற செய்தியாலும் இது உண்மைக் கதையன்று என்று புலப்படுகின்றது. திருவாளர். K. V. சுப்பிரமணிய ஐயர் B.A. என்பவர் தாம் ஆங்கிலத்தில் எழுதியுள்ள "Historical sketches of Ancient Dekhan" என்ற புத்தகத்தின் ஓரிடத்தில் சிலப்பதிகாரத்தையும் மணிமேகலையையும் சங்க நூற்களோடு சேர்த்துக் கூறுவதிலும், அவை கூறும் அரசர்கள் சமகாலத்தியவர்கள் என்பதிலும் பெரிய சந்தே

கங்கள் உண்டாகின்றன என்றும், மற்றுமோரிடத்தில், Silappadikaram is useless for purposes of history" என்றும், "Silappadikaram and other similar works appear before us as mere story tellers and that their componturies are full of improbabilities impossibilities and inconsistencies" என்று எழுதியுள்ளார்கள் என்பதை புலவர் அவர்கள் அறிவார்களாக.

மற்றொரு வித்துவான் ஆவணிமாதத்திய இதழில் எழுதியுள்ள "ஊழும் இலட்சியமும்" என்ற கட்டுரையில் கூறுவதுபோன்று ஊழ் என்ற ஒன்றே ஊழாகிய தனக்கும் பிறருக்கும் ஊழாக இருக்கின்றது. ஊழ்தான் உயிர்களை ஊக்குவது; ஏன்? உலகத்தையே ஊக்குகின்றது எனில் குற்றமின்று உலகத்தே மழை பெய்வதும் வெயில் காய்வதும் அந்தந்த நிலப்பகுதியின் ஊழ்வலியே யாகும்; என்பது வான் சிறப்பின் உரையில் பரிமேலழகர் கூறும் செய்தியால் வலியுறுத்தப் பெறும். தானே செய்து கொண்ட கருமத்தை (ஊழ்) ஊட்ட வருங்காலத்து அதனை ஒதுக்க வல்லார் ஒருவருமில்லை. "நான்முகத் தொருவர் சூழினும், ஊழ்வினையொருவரா லொழிக்கற் பாலதோ"? என்றார் பெரியார் ஒருவரும். "ஊழையுமுப்பக்கம் காண்பர்" என்ற தொடரிலுள்ள "ஊழையும்" என்பதிலுள்ள உம்மைக்குப் பரிமேலழகர் ஒழிக்கமுடியாத ஊழையும் என்று பொருள் கூறியிருப்பதும் இக்கருத்துப்பற்றியேதான் என்பது நோக்குவார்களாக. மனத்துக் கெட்டாத ஊழை எட்டுமாறு நூற்கள் எடுத்துக் கூறி மக்களைப் பயமுறுத்தாமலிருந்திருக்குமாயின் உலகம் தலைவிரிகோலமாக வன்றோ திரியும்.

எனவே, ஊழ்வினையுருத்து வந்தூட்டுமென்பதை வற்புறுத்தவந்த சிலப்பதிகாரத்தே முக்கிய உறுப்பினர்களுக்கு ஊழ் கூறுது விட்டதேன்? என்பது எமது கேள்வி. இஃது உண்மைக் கதையாக விருக்குமாயின் முக்கிய உறுப்பின ளாகிய மாதவிக்கு ஊழ் கூறியேயாக வேண்டும் என்பதே எனது கொள்கை. கூற வேண்டாத இடத்தெல்லாம் கூறியும் சில இடங்களில் குறிப்பாகவும் கூறி உள்ளவர் இன்றியமையாத மாதவிக்கு ஏன் கூறவில்லை? சங்கமன் ணிகலன் விற்கச் சென்றதால் கொலையுண்டான். காட்டிக் கொடுத்த "பரதன் என்னும் தீத்தொழிலாளனு" கிய கோவலன் பணி விற்கச் சென்று கொலையுண்டான்" என்று குறிப்பாகக் கூறியுள்ளமையை வித்துவான் அவர்கள் ஆராயல் வேண்டும்.

ஒவ்வொருவரும் ஊழ்வழிப்பட்டே ஒவ்வொரு இலட்சியத்தை மேற்கொள்ளுகிறார்கள். ஊழ் உதவ உதவ இலட்சியத்தை அடைந்து விடுகின்றார்கள். ஊழ் முற்றும் உதவவில்லை யென்றால் இலட்சியம் அலட்சியமாகிவிடுகின்றது. மனவலியாலும் வாக்குவலியாலும் உடல்வலியாலும் (திரிகரணங்கள்) சிறந்த ஒருவன் ஒரு இலட்சியத்தை மேற்கொள்ளுகிறான் என்றாலும் ஊழ் கூட்டிவைக்கவில்லை என்றால் கூழாகி விடுகின்றான். இராவணனுடைய இலட்சியம் சீதையை அடைய வேண்டும் என்பதே: இவன் மன மொழி மெய் என்ற மூன்றாலும் மிகுந்த வன்மையை யுடையவனன்றோ? இவன் மேற்கொண்ட இலட்சியம் முற்றுப் பெற்றதா? இல்லை: ஏன் ? ஊழ் துணை செய்யவில்லை: எனவே, ஊழ் எப்படிப்பட்டவரையும் கூழாக்கி விடுகின்றமையாலேயே "ஊழிற் பெருவலி யாவுள !" என்றார் போலும்: ஊழ் என்ற ஒன்றை, பல ஒருங்கே கூடி எதிர்ப்பினும் முதுகு காண்டலில்லை என்பது அத்தொடரின் துவனிப் பொருளன்றோ?

ஒருவர் நெஞ்சை அள்ளும் என்று, அந்நூல் தோன்றி ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் சொன்னதனால் எல்லோரும் நெஞ்சை யள்ளும் என்று

சொல்ல வேண்டுமா? என்றுமுள தென்தமிழை நெடுநாளாக ஆரிய மொழியிலிருந்து பிறந்த மொழி என்றும் அகத்தியன் பயந்த மொழி என்றும் பலரும் பாடியும் எழுதியுமுள்ளார்கள் என்பதை அனைவரும் அறிவார்கள். நிற்க, ஒரு தமிழர் "மூன்றெழுத் தாலாகிய பாடையுமுண்டோ?" என்றும் எழுதியுள்ளார். இக் கொள்கை நெடுங் காலம் தமிழ் நாட்டிலுலவி வந்தது. இன்றும் சிலரிடம் இருந்து வருகிறது. இப்போது அக் கொள்கைகளைத் தமிழர் ஆதரிக்கிறார்களா? அப்படிக் கூறுவதும் நினைப்பதும் தவறு எனவும், தமிழ் ஆரியத்திலிருந்து பிறந்த மொழியன்று; ஒரு தனிமொழி எனவும் டாக்டர் கால்டுவெல் என்ற துரைமகன் ஆங்கில மொழியிலும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் தமிழ் மொழியிலும் வெளிப்படையாகக் கூறிய பிறகே தமிழ் வீரர்கள் தமிழ் தனிமொழி என மார்பு தட்டுகிறார்கள் இதற்கு முன் மயங்கி யல்லவோ கிடந்தார்கள் என்பதை வித்துவான் அறியட்டும்.

சிலப்பதிகாரமே பொய் என்று, அந்நூலொன்று இல்லை என்றோ, சிலம்பைக் காரணமாகக் கூறவந்த மூன்று செய்திகளை வற்புறுத்தும் கதையை உண்மைக் கதையல்ல; கற்பனைக் கதை என்பதே எம்முடைய கருத்து. கவிச் சக்கிரவர்த்தியால் பாடப்பட்டு இலக்கியச் சுவை ததும்பும் இராமாயணம் கதையால் படும் பாட்டை வித்துவான் அறியவில்லை போலும். இராம கதை, பல மொழிகளில் பலவேறு காலங்களிலிருந்த பல புலவர்களால் எழுதப்பட்டுள்ளது, சிலப்பதிகாரக் கதையையேனும் அதில் வந்திருக்கும் தலைவர்களையேனும்பற்றி வேறு எவரேனும் புலவர் பெருமக்கள் கூறியிருக்கிறார்களா? அம்மியும் குழவியும் காற்றில் பறக்கும்போது இலவம் பஞ்சுபோன்ற சிலப்பதிகாரத்தைப்பற்றி வருந்துவானேன்? பிரபுலிங்க லீலை சுவை ததும்பும் நூலல்லவா? அதை உண்மைக்கதை என யாராகிலும் ஒப்புக்கொள்ளுகிறார்களா? சுவை சொட்டும் "ராசலஸ்" என்று ஜான்ஸனால் எழுதப்பெற்ற ஆங்கில நூலின் கதை உண்மை என எவரேனும் ஒப்புக்கொள்ளுகிறார்களா? சுவையுடைமையே கதை யுண்மைக்குக் காரணமாகாது. வீட்டுக்குச் சுவர்களின்றியமையாமை போன்று நூலுக்குக் கதையும் இன்றியமையாதது. அந்தக் கதை உண்மைக் கதையா யிருக்குமாயின் எச்செய்திகளும் இடையீடு இல்லாமலும் வேண்டுவன விடப்படாமலும் வந்தேயாக வேண்டும்; என்பது நூலிலக்கணம் கண்ட பெரியார்களின் கருத்து.

புத்திசாலிப் பட்டம் கிடைக்கும் என்று, என்னுடைய கொள்கையை வெளியிடுகின்றேனில்லை. என்னைப்போன்றவர்கள் மேலும் மேலும் என்னுடைய கட்டுரைகள் சிலப்பதிகாரத்தைப் பல முறைகளாலும் ஆராயத் தூண்டும் என்று கருதியேயாகும் என்பதைத் தமிழுலகம் கருதவில்லை. இனியாகிலும், யான் எடுத்துக்கொண்ட தலைப்புக்கும் யான் கூறும் செய்திக்கும் ஏதேனும் முரண்பாடுகள் இருக்குமாயின் அதனை எடுத்துக்காட்டினால் நலமாக விருக்கும்.

---

## முதலாளி ஒரு கழுதை

**முதலாளி:—என்ன ஐயா! சுத்த மூடனாகவிருக்கிறாயே. நான் உன்னை அனுப்பிய இடத்தில் மட்டிக்கழுதையைப்போல் நடந்திருக்கிறாயே?**

**குமாஸ்தா:—சார், நீங்கள் அப்படிச் சொல்லக்கூடாது. நான் உங்கள் பிரதிநிதி என்ற ஹோதாவில் தான் நடந்தேன்.**

இந்த வாழ்க்கை இனித் திரும்பி வரப்போவதில்லை. அதற்குள் ளாக வாழ்க்கையை நன்ருக அனுபவித்ததுதான் கண்ட பலன். ஆகவே, சமுதாயத்தில் பேதங்களை அகற்றி ஒழுங்காகவும் நியாயமாகவும் வாழப் பார், மனிதனே!

# வித்தியாசத்தை ஒழி.

தி. மு. ராமகிருஷ்ணன்.

★

ஊரிலே ஒன்று சொல்லிக்கொள்வார்கள். "டேய், சுவர் வைத்துத்தான் சித்திரம் எழுதவேண்டும். ஆகையி ஞல் உடம்பை நன்ருய்க் கவனித்துக்கொள்" என்று எங்கள் வட் டாரங்களில் எல்லாருமே பேசிக் கொள்வதுண்டு. அந்தமாதிரி பேச்சுகளுக்கெல்லாம் இடம் கொடுப்பவர்களா நாம்! நாமெல்லோ ரும் இந்த உடலை எப்படிப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்று தெரிந்துகொண்டோ மல்லவா? சுக ஜீவியம், நீடித்த வாழ்க்கை எந்தப் போக்கிலே மிளிரவேண்டும் என்பதை நாம் அறிய வேண்டியது நமது கடமை யல்லவா?

உலகம் எண்பத்து நான்கு லக்ஷம் ஜீவராசிகளையும் அடக்கிக் கொண்டிருக்கிறது என்பதை நாம அறிகிருேம். நம் முன்னோர் கள் பரமஞானிகள் தீர்க்கதரிசிகள். அறிவாளிகள். ஜீவராசிகள் அனைத்திற்கும் உடல் பல தினுசுகளிலே அமைந்திருந்த போதி லும் உயிர் எல்லாம் ஒரே ரூபம்தான் என்று ரொம்ப நுட்பமான முடிவை கட்டி விட்டார்கள். அது மாத்திரமா? ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை கணக்கு ஜாபிதாகூடத் தயாரித்து விட் டார்கள். இப்படிப் பல இனங்களாக இயற்கையில் மறைந்து கிடந்த ரகசியத்தை நமக்குத் தெரிவித்திருக்கிருர்கள். நாமும் அவர்கள் வழி வந்தவர்கள்தான். அவர்கள் பகுத்தறிவு நம்மிடை யேயும் பொதிந்து கிடக்கிறது. அதைப் பண்படுத்த வேண்டாமா? அப்பொழுதுதான் மனித இனத்தில் நாம் சேர்க்கப்படுவோம். வெறும் மனித உடல் எடுத்து நூற்று இருபத்தொரு வருஷம் வாழ்வது பெருமை என்று எண்ணுகிறீர்களா? "One crowded hour of gloriows life is worth an age without a name" என்று ஒரு பெரியார் சொல்லுகிருர். பூமிக்குப் பாரமாக வாழ்வதில் பய னில்லை. வீரமான வாழ்க்கையை ஒரு மணி நேரம் இந்த உலகத் திலே நடத்திக் காண்பித்தால் போதும். அதில் தான் உயிர் இருக்கிறது. அப்படி யில்லாமல், "ஐயோ! என் வாழ்க்கையை வேம்பாக்கி விட்டேனே. வாழ்நாட்களை வீணுக்கி உலகம் என்னை வெறுத்துத் தள்ளும்படி காலத்தைக் கழித்து விட்டேனே. என் ஞல் இந்த உலகத்துக்கு என்ன பயன்?" என்று ஒருவன் மனம் வருந்திச் சாகாதபடி பார்த்துக் கொள்ளவேண்டும் என்று நான் சொல்லவில்லை. "ஏழை யென்றும் அடிமை யென்றும் எவனு

நில்லை ஜாதியில்" என்ற ஸ்லோகத்தை நனவர்க்கிய தேவதச்சன் மகரான் லெனின் சொல்கிறார். அற்பத்தனமான பாதையில் செல்லாமல் அமரத்வம் நிறைந்த பாதையிலே செல்வோமாக.

இந்த நிலைமையில் மனித சமுதாயம் ஒரே பெற்றோரின் புதல்வர்கள்தான் என்பதை உணரவேண்டும். உலகில் பரந்து கிடக்கும் மக்கள் எல்லோரும் நம் உறவினர்கள் என்பதை மறந்து விடக்கூடாது. முதல் முதலில் இப்பொழுது வசிக்கிற அவ்வளவு பேரும் வானத்திலிருந்து குதித்து விட்டோமா என்ன? ஒரு வித்திலிருந்துதான் இந்த உலகமாகிய விருட்சம் வளர்ந்து கொண்டிருக்கிறது. அப்பொழுது மனிதனுக்கும் மனிதனுக்கும் ஏற்றத்தாழ்வு காண்பிப்பது எவ்வளவு பேதமை!

காலம் மாறிக்கொண்டு வருகிறது. மனித சமுதாயம் முன்னேற்ற மடைந்துகொண்டுதான் வருகிறது. அன்று தொழில்களின் மாறுபாடுகளுக் கேற்பப் பல வகுப்புகள் தோன்றி விட்டன. ஒவ்வொரு வகுப்பாரும் தங்களுக்கு ஏற்ற நிலத்தைத் தேடி பிரிந்து விட்டார்கள். அவ்வளவுதான அந்த மூலக்கதைதான் இன்று பல மதங்களாகவும், ஜாதிகளாகவும் மாறுபட்டு விளங்குகின்றன. மனிதனின் ஒழுக்கத்துக்கும் உண்மை வாழ்க்கைக்கும் அஸ்திவாரம் அமைக்க எழுந்த மதம் நாளடைவில் ஒரு சில வகுப்பாரை நசுக்கும் தன்மையில் கோர சொரூபமாக மாறிவிட்டது. அஞ்ஞானத்தில் தான் தாண்டவமாடிக் கொண்டிருக்கிறது. இது முற்றிலும் கொடுமை! கொடுமை!! கொடுமையை எதிர்த்து நிற்க வேண்டியது நமது கடமை. நாம் எல்லோரும் ஓர் இனம், ஓர் நிறை, இந்த நாட்டு மன்னர் என்ற கொள்கையை நிலைநாட்ட வேண்டும். ஜாதி பேதம், நிற பேதம் நம் மாசற்ற உள்ளத்திலிருந்து அகலவேண்டும்;

ஏ, மனிதனே முதலில் இந்த வித்தியாசத்தை ஒழி.

---

## அவருக்குத் தெரியாது

**கணக்கு உபாத்தியாயர்:—ஒரு ஆட்டு மந்தையில் 179 ஆடுகளிருக்கின்றன. அதில் 79 ஆடுகள் மந்தையை விட்டு ஓடிப்போனால் பாக்கி எவ்வளவு ஆடுகள் மந்தையில் இருக்கும்?**

**கோபால்:—ஒன்றும் இருக்காது. சார்!**

**க. உ:—முட்டாள்; இவ்வளவு சுலபமான கணக்கிற்கு விடை தெரியவில்லையே.**

**கோபால்:—ஆட்டின் சுபாவம் உங்களுக்குத் தெரியாது சார்.**

**—N. நஜீ.**

தொடர் கதை.

# தேவதேவி

சு. மீ. கணபதி



இதன் நடுவில் சோமு மூன்று நாட்களுக்கு லீவு எழுதி எடுத்துக் கொண்டு, தன்னுடன் வேலை செய்யும் மற்றொரு குமாஸ்தாவின் வீட்டிற்குச் சென்று அவனிடம் கொடுத்தான். தான் ஒரு முக்கியமான விஷயமாக இந்திரநகர் செல்வதாகவும், வாசுவும் அங்கிருப்பதால் சௌகரியமாக இருக்குமெனவும் சொன்னான். அங்குள்ள ஒருவருக்குக் கடிதம் கொடுப்பதாகச் சொல்லியதையும் வேண்டாம் என மறுத்துச் சோமு தன் வீடடைந்தான். சாப்பாடு முடிந்த பின்பு அங்கு எவ்விதம் பேசவேண்டுமென்பதை அவர்கள் தாயார் கூறியதெல்லா வற்றையும் தெரிந்து கொண்டு, ஸ்டேஷனுக்குச் சென்று டிக்கட் வாங்கி இரயிலேறினர்.

ரயில் புறப்பட்டதும் சோமுவின் மனம் சங்கடப்பட ஆரம்பித்தது. நாம் புறப்பட்டது சரியானதா? காரியம் கை கூடாவிடில் வாசுவின் நட்பு நிலையாக இருத்தல் சாத்தியமா? நமக்கே பேசத் துணிவு வராது புறப்பட்டது முட்டாள் தனம். சுந்திரா சிறு பெண். அவள் பேச்சைக் கேட்டுப் புறப்பட்டோம். இனிமேல் என்ன நடந்தாலும் ஈசன் செயல் என எண்ணினான்.

சுந்திராவு மப்படியே இலகுவில் யோசனை சொல்லிவிட்டோம். வாசு இல்லாத பொழுது அவர்கள் வீட்டில் சீட்டு அனுப்பினால் பார்க்க முடியாது என்று சொல்லிவிட்டார்களானால் வாசுவுடனும் அவர்கள் வீடு போக முடியாதபடி ஆகிவிடும். இதற் கென்ன செய்வது? வாசு இருக்கும் பொழுது தான் செல்ல வேண்டும். மண விஷயமாகப் பேசினால் பெரியவர்களைக் கேட்டுக்கொண்டு சொல்வதாகச் சொல்லிவிடலாம். நிச்சயமாகிவிட்ட பின்பு மறுத்துச் சொல்ல முடியாது. மணத்தைப் பற்றிப் பேசாமலேயே வாக்குறுதி வாங்கவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டாள்.

‘சுந்திரா நீ முதலில் கூறியபடியே செய்யவேண்டும். நானும், வாசுவும், நாம் தங்குமிடத்தில் பேசிக்கொண் டிருக்கும் பொழுது நீ அவர்கள் வீடு சென்று காரியத்தை முடித்துக்கொண்டு வந்துவிட்டாயானால் வாசுவையும் சரிப்படுத்தி விடலாம்.”

“உள்ளே போக அனுமதி மறுத்துவிட்டால் காரியம் கெட்டுவிடும். அதற்குத்தான் சிறிது யோசனை செய்யவேண்டி யிருக்கிறது.”

“நீ சீட்டு அனுப்பினால் தான் அந்தக் கவலை. வெளியூரிலிருந்து பார்க்க வந்திருப்பதாகச் சொல்லவேண்டும். உள்ளிருந்து கண்டிப்பாய் வரச் சொல்வார்கள். வெளி வேலையாக வந்ததாகமட்டும் கூறாதே. வாசுவிடம் மட்டிலும்தான் அவ்விதம் கூறவேண்டும். ஆனால் எப்படிப் பேசுவது என்பதை நிர்ணயம் செய்துகொள். அங்கு போனதும் பேசத் தெரியாது போனால்......”

“கடவுள் மீது பாரத்தைப் போட வேண்டியதுதான். நாம் சிறிது தூங்கினால் நல்லதென நினைக்கிறேன்.”

“ஆமாம் நீ தூங்க முயற்சி செய். மனதில் கிளர்ச்சி உண்டானால் தூக்கம் வராது.” அதன்பின்பு இருவரும் பேசாமலே படுத்திருந்தனர்.

இந்திர நகரம் அடைந்ததும் ஹோட்டல் ஆட்கள் ஸ்டேஷனில் வந்திருந்தனர். அவர்களுடன் கூடவே சென்று ஒரு அறையை எடுத்துக் கொண்டான். காலை ஆகாரம் அருந்திய பின்பு ஊரைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டனர். தாங்கள் தங்கியிருக்கு மிடத்திற்கு சப்கலெக்டர் வீடு மிகவும் சமீபமாக இருப்பதை அறிந்தனர். ஊர் பூராவும் பார்த்தபின்பு சுந்திராவை ஹோட்டலி லிருக்கும்படி சொல்லிவிட்டுச் சப்கலெக்டர் வீட்டிற்கு வந்தான். சேவகனிடம் வாசுவைத் தனிமையில் கண்டு ஒருவர் வந்திருப்பதாகக் கூறச் சொன்னான். வாசுவும் வெளியே வந்து சோமுவைக் கண்டு ஆனந்தமுடன் அவனை உள்ளே வரும்படி அழைத்தான்.

"இப்பொழுது கொஞ்சம் வேலை யிருக்கிறது. மாலையில் வருகிறேன். உனக்கு வேலை எதுவு மில்லாவிட்டால் என் கூடவே வரவேண்டும்" என்றான் சோமு.

"எனக்கு என்னடா வேலை யிருக்கிறது? எங்கு வந்தாய்? என்ன விசேஷமாக வந்தாய்? முதலில் இதைச் சொல்."

"நடு ரோட்டில் சொல்லவேண்டும் என்கிறாயா? நான் தங்கி யிருக்கு மிடம் சென்று கூறுகிறேன்."

"நீ தங்கி யிருக்கும் இடமா? அப்பொழுது நீ இங்கு வந்து எத்தனை நாட்க ளாகிறது? ஏன் என்னை இதுவரை பார்க்காம லிருந்தாய்?"

"உன்னைச் சேவகன் வந்து அழைத்தபொழுது தனிமையில் தானே இருந்தாய்? நீ புறப்பட்டு வரும்போது யாரும் 'எங்கே போகிறாய்?' என்று உன்னைப் பார்த்துக் கேட்டார்களா? அவர்களிடம் என்ன சொல்லி வந்தாய்? ஆளைக் காணோம் என்று தேடப் போகிறார்கள்."

"நீ உன் பெயரைச் சொல்லி அனுப்பாதபடியால் வேறு யாரோ எதற்காகவோ என்னைப் பார்க்க விரும்புவதாக நினைத்து வந்தேன். வீட்டில் இதோ வந்துவிடுகிறேன் எனக் கூறி வந்திருக்கிறபடியால் சொல்லி வருகிறேன். நேரமானாலும் பாதகமில்லை. நான் சொல்வது சரிதானே."

"வெளியி லிருக்கும் சேவகனிடம் சொல்லி வந்துவிடு. வீட்டிற்குள் சென்றால் என்னைப் பற்றி யெல்லாம் சொல்லவேண்டி யிருக்கும். நேரமும் அதிக மாகலாம். தவிரவும் என்னை உள்ளே அழைத்துப் பேசிக் கொண்டிருக்கச் சொன்னாலும் சொல்லலாம்."

"வீட்டிலேயே பேசிக் கொண் டிருந்தால் என்ன? அவசரமாக வெளியில் போய்த்தா னாகவேண்டும் என்கிறாயா?"

"ஆம்ாம். சொல்லி வந்துவிடு" என சோமு கூறவும் சேவகனிடம் சொல்லிவிட்டு வாசு திரும்பினான். இருவரும் ஹோட்டலை அடைந்தனர்.

"அட! சுந்திராவும் வந்திருக்கிறாளே. சௌக்யமாக சுந்திரா? ஏண்டா சோமு, முன்னமேயே சொல்லாமல் இருந்தாயே?"

"சந்தர்ப்பம் கொடுத்தால் தானே நான் சொல்ல முடியும்?"

"நீங்க ளிருவரும் பேசிக் கொண்டிருங்கள். அதற்குள் நான் பார்க்க வேண்டியவர்களைப் பார்த்து வருகிறேன்" என்றாள் சுந்திரா.

"உனக்குத் தெரிந்தவர்கள் இங்கிருக்கிறார்களா? எனக்குச் சொல்லவே யில்லையே?"

"இன்றைக்குத் தான் பழக்கம் செய்து கொள்ளப் போகிறேன். அன்று நீங்கள் செய்துள்ள பிரசங்கத்தின் குறைகளைப் பற்றி லேடீஸ்

ளைப்பில் பேச ஏற்பாடு செய்யத்தான் நான் செல்வது. சென்று வரட்டுமா?''

"உண்மையாகவா சுந்திரா? நானே அதற்கு வேண்டிய ஏற்பாடு களைச் செய்கிறேன். தெரியாத மனிதர்களிடம் சென்று காரியசித்தி பெறுவது சிரமம்."

சுந்திரா சிரித்துக் கொண்டே வெளியில் சென்றாள்.

"ஏண்டா வாசு! நீங்க ளிருவரும் கடைசியில் பேசிக் கொண்டதின் அர்த்தம் விளங்க வில்லையே."

"அதெல்லாம் அப்புறம். நீ இங்கு எதற்காக வந்தாய்? எத்தனை நாட்கள் லீவு. இதெல்லாம் முதலில் சொல்."

"எதற்காக வந்தேன் என்று தெரிய வில்லையா? உன்னைப் பார்க்கத் தான். இன்றிருந்து மூன்று நாட்கள் லீவு. நாளை ஊர் திரும்பப் போகிறேன்."

"என்னைப் பார்க்கவா வந்தாய்? சரி; எதற்காக?''

"இதற் கெல்லாம் நான் பதில் சொல்லக் கூடாது என்பது சுந்திராவின் வேண்டுகோள். ரகசிய சமாசாரம். ஆகவே அவள் வந்த பின்பு தெரிந்து கொள்."

"நீ வந்த காரியம் நான் தெரிந்து கொள்ளக் கூடாதது என நினைக்கிறாய் போலும்?''

"அதிருக்கட்டும். நீ இங்கு வந்ததுமுதல் நடந்த வியவகாரங்களை யெல்லாம் சொல்."

"முதலி லிருந்தே சொல்கிறேன்" என்று கூறி பூரா சமாசாரத்தையும் கூறி முடித்தான். மணி பத்து ஆகிவிட்டது. அதிக நேரமாகியும் சுந்திரா திரும்பி வரவில்லை.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்

---

### ஆசை நிராசை யாயிற்று

ஒரு விஷயம் தெரிவதற்கு முன்பு அதைப் பற்றிப் பிரமாதமாகப் பேசுவது வழக்கம். காரியங்களைப் பற்றி சொல்ல வேண்டியதில்லை. இந்தக் காரியத்தை என்னால் முடித்தல் சாத்யம் என எண்ணிப் பொறுப்பை ஏற்றுக் கொள்வார்கள் ஆனால் காரியத்தில் இறங்கியபின்பு அதன் கஷ்டத்தை உணர்வார்கள். சுந்திரா தன்னால் வாசுவின் சகோதரியை தன் பக்கம் சிபார்சு செய்யும்படி செய்வது எளிது எனவே எண்ணினாள். ஆனால் வீட்டின் முன் பக்கம் வந்த உடனேயே யோசனை தோன்ற ஆரம்பித்தது. எப்படிப் பேச்சைத் துவக்குவது என்றே புரியாமல் திகைத்தாள். ஆனால் சுய மரியாதை ஒன்றிருக்கிறதே. திரும்பிப் போக இவள் விரும்பியும் அது இடங் கொடுக்க மறுத்துவிட்டது. வேறு வழி யில்லாமையால் சேவகனிடம் 'வெளியூரி லிருந்து எஜமானியைப் பார்க்க நான் வந்திருப்பதாகச் சொல்'

என்றாள். சேவகனும் உட்சென்று வந்து சுந்திராவை உள்ளே வரச் சொன்னார்கள் என்றான். மனதைத் திடப்படுத்திக் கொண்டு உட்சென்றாள்.

கூடத்தில் கமலாவும் அவள் தகப்பனாரும் உட்கார்ந்திருந்தனர். சுந்திரா அவர்க ளிருவருக்கும் வணக்கம் செய்தாள். கமலா பதில் வணக்கம் செய்து சுந்திராவை உட்காரும்படி கூறினாள். சுந்திரா தரையில் உட்கார்ந்தாள். கமலா அவளை நாற்காலியில் உட்காரும்படி வற்புறுத்திய பின்பு அதில் அமர்ந்தாள்.

"நீங்கள் யார் என்ன விஷயமாக வந்தீர்கள்? உங்களுக்கு எந்த ஊர்? தனிமையில் பேச விரும்புகிறீர்களா?" என்றாள் கமலா.

"தாங்கள் தான் இவ் வீட்டின் எஜமானி எனத் தெரிந்து கொண்டேன். அவர்கள் உங்கள் தகப்பனார் என நினைக்கிறேன்."

"ஆம். உங்களுடைய வேலை இன்னதென முதலில் சொல்ல வேண்டும்"

"தங்கள் சகோதரரும், என் சகோதரரும் நெருங்கிய நண்பர்கள். இருவரும் ஒரே ஆபீஸில் உத்யோகம் செய்பவர்கள். தங்களையும், தங்கள் தகப்பனாரையும் பார்க்கப் பேராவல் கொண்டிருந்தேன். அது இன்று சித்தியாயிற்று. இன்றைய தினத்தை ஓர் சுபதினமாகக் கருதுகிறேன். உங்கள் சகோதரர் வெளியில் சென்றிருக்கிறார் என நினைக்கிறேன். என் பெயர் சுந்திராதேவி மதுரபுரியிலிருந்து உங்கள் எல்லோருடைய தயவையும் நாடி வந்திருக்கிறேன்."

கமலாவும் அவள் தகப்பனாரும் சுந்திராதேவி என்ற பெயர் தெரிந்ததும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். அவர்க ளிருவர் முகத்திலும் புன்னகை தோன்றி மறைந்தது. "உங்களைத் தெரிந்து கொண்டது பற்றிச் சந்தோஷ மடைகிறேன். வாசு வெளியில் சென்றிருக்கிறான். அவனைப் பார்க்க வேண்டு மென்பது விருப்பமானால் சிறிது பொறுத்தபின்பு காணலாம்" என்றாள் கமலா.

"அவரை இப்பொழுது பார்க்கவேண்டு மென்பதில்லை. என்னை உங்கள் வீட்டின் பெண்ணாகக் கொள்ளவேண்டும் என்பது என் பிரார்த்தனை. அதற்காகவே நான் இங்கு வந்தேன். என் சிறு வயது முதல் உங்கள் சகோதரருடன் நெருங்கிப் பழகி வருகிறேன். இந்த விஷயத்தில் நீங்கள் உதவி செய்ய வேண்டும்."

"எனக்குப் பின் வேறு குழந்தைகளே எங்கள் வீட்டில் கிடையாது. எனக்கும் பெண் சந்ததி இல்லாம லிருக்கிறது. ஆகவே உங்களை எங்கள் வீட்டில் வைத்துக் கொள்ளவும், சகல உதவிகள் செய்யவும் நான் தயாராயிருக்கிறேன்."

"தங்களுடைய பரிவுக்காக நான் அன்பு பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன். எங்களுடைய குடும்பம் ஏழ்மையானது அதை உத்தேசித்து தங்கள் சகோதரர் என்னை ஏற்றுக் கொள்வாரோ என்ற சந்தேகம் சிறிது உண்டு."

"வாசுவை மணந்து கொள்ளத் தானே கூறுகிறீர்கள். அவ் விஷயம் அவனைச் சேர்ந்தது. நான் சொல்லியது அந்த அர்த்தத்தி லல்ல."

"நீங்கள் எவ்வித நோக்கத்துடன் கூறி யிருந்தாலும் என் பிரார்த்தனைக்குத் தாங்கள் ஒப்புக்கொண்டு, தங்கள் சகோதரரையும் சம்மதிக்கச் செய்யவேண்டும். இதற்காகவே நான் இங்கு வந்திருக்கிறேன்."

"திடீரென்று முடிவு கூறும் விஷயமல்ல இது. நானும் என் தகப்பனாரும் யோசனை செய்கிறோம். சிறிது இங்கேயே இருங்கள்" எனக் கூறித் தகப்பனாரைப் பார்த்தாள். அவரும் எழுந்து வந்தார். இருவரும் காந்தன் அறையை அடைந்தனர்.

"என்ன விசேஷம்? இருவரும் சோர்ந்து வருகிறீர்களே?" என்றார் காந்தன்.

"வாசு சொன்னானே சுந்திரா என்று ஒரு பெண்ணைப் பற்றி; அவள் வந்திருக்கிறாள்,"

"வாஸ்தவமாகவா? இங்கு ஏன் வரவேண்டும்?"

"கல்யாண விஷயமாகத்தான். தங்கள் குடும்பம் ஏழைக் குடும்பம் என்றும், சிறு பெண்ணாக இருக்கும் பொழுதிருந்து இவளை வாசு அறிவானென்றும் கூறினாள். தேவகியைப் பார்த்த பின்பு வாசு கூறியது உண்மைதான். தேவகியையும் இந்த சுந்திராவையும் ஒன்றாக நிறுத்தினால் சுந்திரா தான் அழகில் தேறுவாள் எனத் தெரிகிறது. பணிந்த சுபாவம்."

"ஆகையால் உன் மனதிற்குப் பிடிக்கிறது என்று சொல்ல வந்தாயாக்கும். மாமா! உங்கள் அபிப்பிராயம்......"

"பெண் நன்றாக இருக்கிறாள். பேசுவதிலும் அறிவுடையவளாகவே தெரிகிறது. வாசு என்ன சொல்லப் போகிறான் என்பதிலும் நீங்கள் அந்தப் பெண்ணைப் பார்த்து என்ன அபிப்ராயம் கொள்கிறீர்கள் என்பதினாலும் தான் மற்ற சமாசார மிருக்கிறது."

"ஆகவே, நானும் அந்தப் பெண்ணைப் பார்க்கவேண்டும் என்று நினைக்கிறீர்களா? நீங்க ளிருவரும் பார்த்தது போதுமே."

"அப்படிச் சொல்லக்கூடாது. உங்கள் அபிப்பிராயம் எப்படி என்பதைச் சொல்லுங்கள். ஹாலில் அந்தப் பெண் உட்கார்ந்திருக்கிறாள்."

"அந்தப் பெண்ணைத் தனிமையில் உட்கார வைத்து வந்திருக்கிறீர்களா? நல்ல வேலையிது. சிறிது இங்கேயே இருங்கள். நானும் அந்தப் பெண்ணுடன் சிறிது பேசிப் பார்க்கிறேன்" என்று கூறி எழுந்தார் காந்தன்.

கமலாவும் அவள் தகப்பனாரும் வந்தனர்.

"இந்தப் பெண்ணின் பெயர் சுந்திரா தேவியாம். பெயர் பொருத்தமாகத்தான் அமைந்திருக்கிறது. நமது வாசுவை மணந்து கொள்வதற்கு நம்முடைய சம்மதம் வேண்டி வந்திருக்கிறாள்" என்றாள் கமலா.

"முதலில் வாசுவின் சம்மதம் பெற வேண்டாமா? அவன் சமாசாரம் தெரிந்துதான் சொல்லவேண்டும்" என்றார் காந்தன்.

"அவரிடமும் இது விஷயமாக ஒரு நாள் தனிமையில் சம்பாஷித்தேன். என்னைச் சகோதரியாகப் பாவிப்பதாகச் சொன்னார். நான் மறுபடி கேள்வி கேட்டதற்கு பதில் சொல்ல முடியாது தவித்தார். உங்க ளெல்லோருடைய சம்மதமும் ஆசீர்வாதங்களும் இருந்தால் அவர் மறுக்கத் துணியமாட்டார்." என்றாள் சுந்திரா.

"உங்களுக்குள் நடந்த சம்பாஷணையை ஊகிக்க முடிகிறது. நீங்கள் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லவில்லை யென்கிறீர்கள். விவரமாகச் சொன்னால் இந்த விஷயத்தில் உதவியா யிருக்கும்" என்றாள் கமலா.

"சிறு குழந்தை முதல் என்னைச் சோதரியாகப் பாவித்துவிட்டதாகவும் அந்த அன்பை மாற்ற முடியாதென்றும் கூறினார். ஒரே வீட்டில் வளரும்

இருவருக்குள் மணம் நடை பெறுவதில்லையா? எனக்கு மட்டிலும் விலக்கு ஏன்?" என்றேன். இதற்கு இன்றுவரை மௌனம் தான். அவரிடம் நான் பழகியதி லிருந்து உங்களுடைய வார்த்தையை மறுக்க மாட்டார் என்ற நம்பிக்கை எனக்குண்டு. என்னை உங்கள் எல்லோருக்கும் பிடித்தமா யிருந் தால் அவருக்கு மணம் செய்துவைக்க வேண்டும். என் உள்ளத்தில் எழும் ஆர்வத்தினாலும், உங்கள் பேரன்பைக் கண்டும் நான் துணிந்து இவ்வளவு பேசி விட்டேன்."

"நீங்கள் கூறுகிறபடி நடந்திருந்தால் அவன் மறுக்க மாட்டான். அவன் விருப்பத்திற்கு மாருக நாங்கள் நடக்கமாட்டோம். அவனை இன் னும் காண வில்லையே?" என்றாள் கமலா.

"மன்னிக்க வேண்டும். என் பேச்சுக்கு முட்டுக்கட்டை போடுவார் எனப் பயந்து என் சகோதரர் மூலமாக அவரை வெளியே வரும்படியாகச் செய்தேன். என் சகோதரரும், அவரும் மஞ்சுளா விலாஸ் ஹோட்டலில் பேசிக்கொண் டிருப்பார்கள்."

"ஆனால் நீங்கள் இங்கு வந்திருப்பது அவனுக்குத் தெரியு மென நினைக் கிறேன். உங்கள் சகோதரரும் உங்களை எதிர் பார்த்துக் கவலைப் படுவாரே."

"என்னை அவர் பார்த்தார். நான் அவருக்குப் போக்குக் காட்டி வந்தேன். நான் இங்கு வந்ததை அவர் அறியமாட்டார். நான் வந்து அதிக நேர மாகிவிட்டது. எனக்கு உத்திரவு கொடுங்கள்" என்று எழுந்தாள்.

"அவர்க ளிருவரையும் இங்கு வருவிக்கிறேன் இங்கேயே எல்லோரும் சாப்பிடலாம்" எனக் கூறி காந்தன் வெளியில் சென்றார். சேவகனுக்குக் கட்டளையிட்டுத் திரும்பி வந்து, "அம்மா சுந்திராதேவி! நாங்கள் கூப்பிடும் வரையில் அந்த எதிர் அறையில் சென்றிருங்கள்.

சேவகன் சென்று அழைக்கவும் வாசுவும் சோமுவும் புறப்பட்டு வந்தார்கள். அவர்களைப் பார்த்து, "என்ன வாசு இவ்வளவு நேரம்? கூட வந்திருப்பவர் யார்? எப்பொழுது சாப்பிடுவது?" என்றார் காந்தன்.

"என் கூட வேலை செய்பவன். பெயர் சோமநாதன் என்பது. இவ னுடன் பேசிக் கொண் டிருந்ததில் பசி தெரியவில்லை. சரி, சாப்பிடலா மென்றால்........."

"பசிக்கவில்லை என்றால் உன் சிநேகிதருடனும் சிறிது பேசிக் கொண் டிருந்த பின்பு சாப்பிடலாம்." இருவரும் ஆமோதித்தனர்.

"அன்று சுந்திரா என்ற பெண்ணை மணந்து கொள்ளும்படி எல்லோ ரும் கூறினது நினைவி லிருக்கிறதா? அதற்கு நீ பதிலே சொல்லவில் லையே?" என்றாள் கமலா.

"கமலா! என்னுடன் வந்திருக்கும் நண்பர் சுந்திராவின் சகோதரன்."

"ரொம்ப நல்லதாயிற்று. வாசுவுக்கு உங்களுடைய தங்கையை விவா கம் செய்து வைப்பதில் ஆட்சேபனை யுண்டா?"

"ஆட்சேபனையா? கிடையவே கிடையாது. அதற்காக நான் ஈசனை அல்லும் பகலும் பிரார்த்தித்து வருகிறேன். காரியம் முடியவேண்டும். அதுவே என் சிந்தனை" என்றான் சோமு.

"என்னடா சோமு! இங்கு வந்ததும் புது மனிதன் மாதிரி பேச ஆரம்பித் திருக்கிறாய். அவர்கள் எல்லோரும் விளையாட்டாகப் பேசினால் நீ உண்மையென நினைத்திருக்கிறாய். ஒரு சந்தேகம் கமலா, சுந்திரா இங்கு வந்தாளா?"

# தாரண ௵ ஐப்பசிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடிகாரமணி-சென்னை காலை 6½-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 1 | 41 | 39 | 180 | 30 | 178 | 01 | 189 | 26 | 177 | 48 | 144 | 34 | 210 | 03 | 77 | 47 | 89 | 53 |
| 2 | 1 | 45 | 35 | 181 | 30 | 190 | 08 | 190 | 06 | 179 | 30 | 144 | 45 | 211 | 17 | 77 | 48 | 89 | 50 |
| 3 | 1 | 49 | 32 | 182 | 29 | 202 | 16 | 190 | 47 | 181 | 13 | 144 | 57 | 212 | 30 | 77 | 48 | 89 | 46 |
| 4 | 1 | 53 | 28 | 183 | 29 | 214 | 40 | 191 | 28 | 182 | 54 | 145 | 08 | 213 | 44 | 77 | 48 | 89 | 43 |
| 5 | 1 | 57 | 25 | 184 | 28 | 227 | 07 | 192 | 09 | 184 | 35 | 145 | 20 | 214 | 57 | 77 | 49 | 89 | 40 |
| 6 | 2 | 01 | 21 | 185 | 28 | 239 | 49 | 192 | 50 | 186 | 15 | 145 | 31 | 216 | 11 | 77 | 49 | 89 | 36 |
| 7 | 2 | 05 | 18 | 186 | 28 | 252 | 35 | 193 | 31 | 187 | 54 | 145 | 43 | 217 | 25 | 77 | 49 | 89 | 34 |
| | | | | | | | | | | | | | | | | வ | ஆ | | |
| 8 | 2 | 09 | 14 | 187 | 27 | 265 | 52 | 194 | 12 | 189 | 33 | 145 | 54 | 218 | 38 | 77 | 49 | 89 | 31 |
| 9 | 2 | 13 | 11 | 188 | 27 | 279 | 10 | 194 | 53 | 191 | 12 | 146 | 05 | 219 | 51 | 77 | 49 | 89 | 27 |
| 10 | 2 | 17 | 07 | 189 | 27 | 293 | 09 | 195 | 34 | 192 | 50 | 146 | 16 | 221 | 05 | 77 | 48 | 89 | 24 |
| 11 | 2 | 21 | 04 | 190 | 27 | 307 | 09 | 196 | 16 | 194 | 27 | 146 | 27 | 222 | 19 | 77 | 48 | 99 | 21 |
| 12 | 2 | 25 | 00 | 191 | 27 | 321 | 50 | 196 | 57 | 196 | 04 | 146 | 38 | 223 | 32 | 77 | 48 | 89 | 18 |
| 13 | 2 | 28 | 57 | 192 | 27 | 336 | 32 | 197 | 38 | 197 | 40 | 146 | 49 | 224 | 45 | 77 | 47 | 89 | 15 |
| 14 | 2 | 32 | 53 | 193 | 27 | 351 | 34 | 198 | 19 | 199 | 16 | 147 | 00 | 225 | 58 | 77 | 46 | 89 | 12 |
| 15 | 2 | 36 | 50 | 194 | 27 | 6 | 37 | 199 | 01 | 200 | 51 | 147 | 10 | 227 | 11 | 77 | 45 | 89 | 08 |
| 16 | 2 | 40 | 46 | 195 | 27 | 21 | 24 | 199 | 42 | 202 | 26 | 147 | 21 | 228 | 24 | 77 | 45 | 89 | 05 |
| 17 | 2 | 44 | 43 | 196 | 27 | 36 | 12 | 200 | 24 | 204 | 00 | 147 | 32 | 229 | 37 | 77 | 44 | 89 | 02 |
| 18 | 2 | 48 | 39 | 197 | 27 | 50 | 43 | 201 | 05 | 205 | 34 | 147 | 43 | 230 | 51 | 77 | 43 | 88 | 59 |
| 19 | 2 | 52 | 36 | 198 | 27 | 65 | 14 | 201 | 47 | 207 | 07 | 147 | 53 | 232 | 04 | 77 | 42 | 88 | 56 |
| 20 | 2 | 56 | 32 | 199 | 27 | 77 | 49 | 202 | 29 | 208 | 40 | 148 | 03 | 233 | 7 | 77 | 41 | 88 | 53 |
| 21 | 3 | 00 | 29 | 200 | 27 | 90 | 25 | 203 | 11 | 210 | 13 | 148 | 13 | 234 | 30 | 77 | 40 | 88 | 50 |
| 22 | 3 | 04 | 25 | 201 | 27 | 102 | 45 | 208 | 53 | 211 | 46 | 148 | 23 | 235 | 43 | 77 | 39 | 88 | 47 |
| 23 | 3 | 08 | 22 | 202 | 28 | 115 | 06 | 204 | 35 | 213 | 18 | 148 | 33 | 236 | 56 | 77 | 37 | 88 | 43 |
| 24 | 3 | 12 | 18 | 203 | 28 | 127 | 02 | 205 | 17 | 214 | 49 | 148 | 43 | 238 | 09 | 77 | 35 | 88 | 40 |
| 25 | 3 | 16 | 15 | 204 | 28 | 138 | 58 | 205 | 59 | 216 | 20 | 148 | 53 | 239 | 22 | 77 | 33 | 88 | 36 |
| 26 | 3 | 20 | 11 | 205 | 29 | 150 | 48 | 206 | 41 | 217 | 51 | 149 | 03 | 240 | 35 | 77 | 30 | 88 | 33 |
| 27 | 3 | 24 | 08 | 206 | 29 | 162 | 39 | 207 | 23 | 219 | 22 | 149 | 12 | 241 | 49 | 77 | 28 | 88 | 30 |
| 28 | 3 | 28 | 04 | 207 | 29 | 174 | 43 | 208 | 05 | 220 | 52 | 149 | 21 | 243 | 02 | 77 | 26 | 88 | 27 |
| 29 | 3 | 32 | 01 | 208 | 29 | 186 | 48 | 208 | 47 | 222 | 22 | 149 | 30 | 244 | 15 | 77 | 24 | 88 | 24 |
| 30 | 3 | 35 | 57 | 209 | 29 | 199 | 03 | 209 | 29 | 223 | 52 | 149 | 40 | 245 | 28 | 77 | 22 | 88 | 21 |

ஆகாயக் காட்சி:-
- 1௳ காலை மணி 6-36க்கு சசிக்குத் தெற்கில் பா 4-43ல் குஜனும்,
- 4௳ ,, ,, 8-32க்கு ,, ,, பா 4-47ல் சுக்ரனும்,
- 19௳ ,, ,, 6-30க்கு ,, வடக்கில் பா 0-06ல் சனியும்,
- 25௳ பின் இரவு ,, 2-54க்கு ,, தெற்கில் பா 2-53ல் குருவும்,
- 30௳ ,, ,, 4-20க்கு ,, ,, பா 4-08ல் குஜனும், சந்திர சமாகமம்.

பிரவேசங்கள் முதலியன:—20௳ இரவு மணி 3-21க்கு புதனும் [illegible]0௳ மாலை மணி 7-04க்கு சூர்யனும் 30௳ இரவு மணி 11-46க்கு குஜனும் விருச்சிகத்திற்[illegible]ம். 25௳ இரவு மணி 2-08க்கு சுக்ரன் தனுசுக்கும் பிரவேசிக்கின்றன. 8௳ சனி வக்ரா[illegible]ம். 5௳ வரை பாதுமத்யம்; அதன்மேல் புத சுக்ர ஸாமீப்யம்.

* அயனாம்சம் பா-22 கலை-57 விகலை 14·3966 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† வ.ா ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும் சந்தேகமுடையோர் பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபாரகுணம் தெரியவரும். தவிர, யாங்கள் இம் மகத்துவம் பொருந்திய லேகிய செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும். மேலும் இவற்றை நோய் உள்ளவர்கள் தாம் சாப்பிடவேண்டும் என்ற அவசியமில்லை: யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய் இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் லேகிய செந்தூரங்களை யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும்: இது தவறாது. இவற்றைத் தருவித்து நீங்கள் எண்ணிக்கையாக 10-நாளைக்குச் சாப்பிட்டால் அவற்றின் குணம் உங்களுக்கு நன்றாய்த் தெரியும்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. எந்தப் பண்டங்களையும் நீக்குதலின்றி மருந்து சாப்பிடும் காலத்தில் வயிற்றுக்குத் துரோகம் செய்யாமல் சாப்பிடலாம். இவற்றைச் சாப்பிடும்போது பசி அதிகமாய் எடுக்கும். ஆதலால் பச்சைப்பயற்றுக் குழம்பு தயிர், பால், கறி, மார்கண்ட சூப்பு. நெய் இவைகளை அதிகமாய்ப் பசியைத் தணிக்கக் கூடிய விதமாகத் தாமதம செய்யாமல் சாப்பிட்டு வரவேண்டியது. இவற்றைப் புசிக்கும்போ தெல்லாம் பலகாராதிகள் சாப்பிடல் வேண்டும். தயிர், பால், நெய், முதலியவைகள் எவைகளா யிருந்தாலும் சந்தேகமின்றிச் சாப்பிட்டு வரலாம்.

இந்தியா, ஸிலோன் ஆகிய உள்நாடுகளுக்கு 24-நாள் சாப்பிடக்கூடிய லேகியமும் செந்தூரமும் விலை ரூ. 1—12—0. போஸ்டேஜ் அணா 9. ஒரே தடவை 48-நாள் மருந்து வாங்குவோருக்கு தபாற்கூலி உள்பட ரூ. **4.**

ஸிலோனில் உள்ளோர் முழு தொகையையும் முன் பணமாக மணி ஆர்டர் அனுப்பி பெற்றுக் கொள்ளவும். முன் பணமின்றி வி. பி. யில் அனுப்பப்பட மாட்டா.

---

**விலாசம்:—லேகியம் டிபோ,**

**6, வெங்கடேச மேஸ்திரி தெரு, மதராஸ்.**

---

## கர்ணபிந்து



காதில் சீழ் வடிதல், காது குத்தல், காது கேளாதிருத்தல், காதில் நமைச்சல் முதலிய வியாதிகளுக்கு இந்த மருந்தில் 2-துளி காலை மாலைகளில் காதில் விட்டு வர, காதிலுள்ள நோய்களெல்லாம் நீங்கி விடும்.

புட்டி 1-க்கு அணா . **4** வி. பி. தபால்கூலி வேறு.

## (காட்லீவர் ஆயில்) மீன் எண்ணெய்

இது பலத்தை உண்டாக்குகிறது. தவிர இரும் பலினால் உண்டாகும் இளைப்பையும் அடக்கும். இளைத்தவர்கள் உபயோகித்தால் தேகம் புஷ்டியாகும், இரத்தத்தைச் சுத்தி செய்யும், சுவாசகாசங்களின் ரோகத்தை குணப்படுத்தும், சரீரத்தினுடைய ஒவ்வொரு பாகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும். இதைக் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூபா **1—8—0.**

---

**தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# புத்திர சந்தான எண்ணெய்



ஆண்மலடு சொன்னலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாரு மில்லே
ஏன்மலடாய்ப் போவதென்று கேட்பா யாகில்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
ஊன்மிருந்தால் புழுதரித்தால் உதிரங் கெட்டா[ல்]
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியாதென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனுலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோறி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனுலும் கரு தரிக்காது.

இந்த எண்ணெயைக் காலே மாலே இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் ஷை குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து திடீரென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.

## சீதபேதி (டிசென்டரி) பவுடர்




இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடி வயிற்று நோய் முதலான வியாதிகளை குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணு 8.

## குழந்தை கக்கிருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானல் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு நேர்த்தியாகவும், சுகமாகவும், குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்கிருமல் நேரம் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாக வந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—4—0- தபாற் செலவு பிரத்தியேகம்.

---

விலாசம்:-தனலட்சுமி கம்பெனி, தபால் பெட்டி நெ. 167, மதராஸ்

# ஆனந்த
# ஆங்கில பாஷா போதினி
## விலை ரூபா 2.

800-பக்கங்களுக்கு மேல் திக்கு காகிதத்தில் அச்சிடப் பட்டு சீமை காலிகோ பைண்டு செய்யப்பட்டது.




இதைச் சிரத்தையுடன் கற்றுக்கொள்ளத் தொடங்குவோர் பணச் செலவில்லாமலும், வேறெவ்விதக் கஷ்டமில்லாமலும் மிக எளிதில் இங்கிலீஷ் பேசவும், படிக்கவும், எழுதவும் கற்றுக் கொள்ளலாம். 10 வருஷம் படிப்பதனால் எவ்வளவு ஆங்கிலத் தேர்ச்சியுண்டாகுமோ அவ்வளவு தேர்ச்சியை ஒரு மாதம் அல்லது 40 நாட்களில் இப்புத்தகத்தின் உதவியைக் கொண்டு அடைந்து, ஆங்கிலத்தை அதி விரைவில் படித்துக் கொள்ளலாம்.

இதில் ஒரு ரூபா முதல் 10 ஆயிரம் ரூபா வரை சம்பளப் பட்டிக் கணக்கு, வட்டிக் கணக்கு, ஒவ்வொரு தேசத்திலும் ஏற்படும் மணி வித்தியாசம், அன்னிய தேச நாணய மதிப்பு முதலியனவெல்லாம் தெளிவாக விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது. இது முக்கியமாக மணியகாரர் கர்ணம், வில்லேஜ் முன்சீப் முதலியவர்களுக்கும், சிலோன் தோட்டங்களிலிருக்கும் கங்காணிமார்கட்கும் உதவி செய்யக்கூடியது.

மேற்படி தெலுங்கு பதிப்பு விலை ரூ. 2.

---

## "ஜீவா" தீட்டிய நவீனங்கள்

## "யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?"

ரூபா 1—0—0.

## சீமாட்டி கார்த்தியாயினி

அணா 12.

## காதலனா? காதகனா?

ரூபா 1—4—0.

## உயிரோவியம்

அணா 12.

---

ஆனந்தபோதினி ஆபீஸ் தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.